ol. IX 1931–1932

# செந்தமிழ்ச்செல்வி

திங்கள் வெளியீடு

ஒன்பதாம் சிலம்பு

இதழாசிரிய கூட்டத் தலைவர்:

கா. சுப்பிரமணியபிள்ளை

எம்.ஏ.,எம்.எல்., அட்வகேட்.

திருநெல்வேலி, தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்

லிமிடெட்

பிரமோதூத௵ - பிரசோற்பத்தி௵



The South India Saiva Siddhanta Works
Publishing Society, Tinnevelly, Ltd.,
Tinnevelly & Madras



[Price Rs. 3-8

Progressive Printers, 2/17, Coral Merchant St., Madras.

# உள்ளுறை

[* இக்குறியிடப்பட்டவைகள் இத்தொகுதியில் முடிவு பெருது தொடர்வன.]

# ப..கள்



## அறிவிப்பு

# செந்தமிழ்ச் செல்வி

## பைண்டுத் தொகுதிகள்

இதுகாறும் வெளிவந்த ஒன்பது ஆண்டு செல்வித் தொகுதிகள் அழகியனவாய்க் கட்டிடஞ் செய்யப்பட்டிருக்கின்றன.

இதன்கண் அரும்பெருந் தமிழ்ப்புலவர்களால் எழுதப்பட்ட தமிழ் இலக்கணம், இலக்கியம், மொழியாராய்ச்சி, சைவசமயம், திருமுறை, பிறசமயங்கள், புராணம், இதிகாசம், நுண்ணூல் (Science) களின் சாரம், வியப்பு மொழிகள் (Wits & Humours) வகை மொழிகள், சீர்திருத்த அறிவுரைகள், அறவுரைகள் முதலியன வெளிவந்திருக்கின்றன. தமிழ்க் கல்வி விரும்புவோர் இத்தொகுதிகளை ஒரு முறை கற்பின் சிறந்த புலமை எய்துவர் என்பது திண்ணம்.

---

### நூல் நிலையங்கட்கு இன்றியமையாது வேண்டப்படுவனவாகும்

| | | |
|---|---|---|
| 1 முதல் 4 & 9 தொகுதிகள் | | |
| | தனித்தனி விலை ரூ. | 3 |
| 5 முதல் 8 | ,, | 4 |
| 9 தொகுதிகளும் | | 30 |
| கையொப்ப நண்பர்களுக்கு | | 28 |

---

தகுந்த கழிவு கொடுக்கப்படும்



நக்கீரனைக் கரையேற்றியது.

ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றும்
திங்கள்தோறும் வெளிவருவது.

| | | |
|---|---|---|
| சிலம்பு கூ | மெய்கண்டான்யாண்டு-எளஅ தைத்திங்கள் 1931ஆம் ஜனவரிமீ—பிப்ரவரிமீ | பரல் க |

திருச்சிற்றம்பலம்

## திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம்

### திருக்குறுந்தொகை

துறக்கப் படாத வுடலைத் துறந்து வெந்தூதுவரோ
டிறப்பன் இறந்தால் இருவிசும் பேறுவன் ஏறிவந்து
பிறப்பன் பிறந்தாற் பிறையணி வார்சடைப் பிஞ்ஞகன்பேர்
மறப்பன் கோலோவென் றென்னுள்ளங் கிடந்து மறுகிடுமே.

துறக்கப்படாத=என்னால் நீக்கத் தகாத

உடலை=இந்த உடலை விட்டு

வெந்தூதுவரோடு=கொடிய நமன் தூதுவரால்

துறந்து=(நான் என் உயிர்) நீங்கி

இறப்பன்=இறந்து விடுவன்

இறந்தால்=அப்படி இறந்தால்

இருவிசும்பு ஏறுவன்=நிரயம் துறக்கம் என்னும் இரண்டு உலகங்களினும் செல்வன்

ஏறிவந்து பிறப்பன்=அவ்வாறு நிரய துறக்கங்களில் சென்றபின் நிலவுலகத்திற்கு வந்து மறுபடியும் பிறவியை எடுப்பன்

[illegible]ால்=அவ்வாறு நிலவுலகத்திற் பிறந்த பொழுது

பிறை அணிவார்சடைப் பிஞ்ஞகன் பேர்=மூன்றும் பிறை இளந்திங்களை நீண்ட சடையிற் றரித்த சிவபெருமானுடைய பேரை

மறப்பன் கொலோ என்று=நான் மறந்து விடுவனோ என்று ஐயப்பட்டு நினைந்து

என் உள்ளம்=எனது உள்ளம் (மனது)

கிடந்து மறுகிடும்=அறியாது சுழன்று கலங்கும்; ஆதலின் இறப்பினுக்கு நான் அஞ்சுகின்றேன் என்பது குறிப்பெச்சம்

துறக்கப்படாத பருஉடல் சிவபெருமானால் அளிக்கப் பட்டதாதலின் அதனை விட்டு ஒருவன் தன் உயிரை நீக்குதலுக்கு அவனுடைய கருத்துக்கு மாறானவை தகாத மறச் செயல் (பகைச் செயல்) என்பது குறிப்பிடப்பட்டது.

வெந்துதுவரோடு என்பது வேற்றுமை மயக்கம்; இரண்டாம் வேற்றுமை உருபு ஐ ஒடு என மாறியது.

இரு விசும்பு என்பதனால் நுண்ணிய நிரய உலகமும் துறக்க உலகமும் குறிப்பிடப்பட்டன. உயிர் பருஉடலை விட்டு நீங்கின பின் முதலாவது நிரய உலகத்திற் சென்று அது நில உலகிற் செய்த மறச்செயல்களுக்குத் தக்கவாறு துன்பம் நுகர்ந்து தான் நுகர்ந்த துன்பங்களுக்கும் மறச்செயல்களுக்கும் உள்ள தொடர்பை நினைந்து அறிந்து பின் துறக்க உலகிற் சென்று அது பயன்குறித்து நில உலகிற்செய்த அறச் செயல்களுக்குத் தக்கவாறு இன்பம் நுகர்ந்து இன்பத்துக்கும் அறச் செயல்களுக்கு முள்ள தொடர்பை நினைந்து அறிந்து அவ்வறச் செயல்களை இன்னும் மிகத் திறனோடு செய்யுந்தகுதி பெற்று நில உலகில் வந்து பிறக்கின்றது, என்று நூல்களிற் கூறப்பட்ட உண்மை குறிப்பிடப்பட்டது.

ஏறுவன் என்பது பருஉலகத்தைவிட நிரய உலகம் நுண்ணிதாயும் நிரய உலகத்தைவிட துறக்க உலகம் நுண்ணிதாயும் இருத்தலைக் குறிப்பிடுகின்றது. உண்மை உலகங்கள் கீழு மேலுமாயில்லை

மறப்பன் கொலோ=மறத்தலாவது பரு உடலில் வந்ததினால் உண்டான மிக்க மல மறைப்பால் உண்டாகின்றது. கொல் ஐயப் பொருளை உணர்த்துகின்றது. ஓ அசை நிலை

கிடந்து=என்பது அறியாமையைக் குறிக்கின்றது.

மறுகிடும்=மறுகுதல். அங்கும் இங்கும் சுழலுதல். உள்ளம் சிவபெரு

மான் பேரை நினைக்குமோ அல்லது மறக்குமோ என்று ஐயப் பட்டுச் சுழலுதல்.

இத்தேவாரப்பாட்டு உயிரானது மலவலி நீங்கும் வரை நில உலகிற் பிறந்து இறந்தும் இறந்த பின் நிரய துறக்கங்களிற் சென்று துன்ப இன்பங்களை நுகர்ந்தும், பின் நில உலகிலே வந்து பிறந்தும் இவ்வாறு பிறப்பு இறப்பு வட்டத்திற் சுழலுகின்ற தன்மையைக் குறிக்கின்றது. இப்பாட்டில் சுவாமிகள் மக்கள் உயிருடைய நிலையைத் தன்மேல் ஏற்றிக் கூறுகின்றார். இதனால் பகுத்தறிவுடைய மக்களுயிர்கள் உலக வாழ்க்கையிலிருக்கும்பொழுது கடவுளைத் தங்கள் உள்ளத்தில் மறவாது நினைந்து கொண்டேயிருந்து அறச் செயல்களைச் செய்வார்களானால், அப்புண்ணியம் அவர்களை இறைவனை மறவாதிருக்கச் செய்யும் என்பது குறிப்பிடப்பட்டது.

மா. வே. நெல்லையப்பபிள்ளை.

---

# நால்வர்களும் கல்வெட்டுகளும்

[திரு. C. M. இராமசந்திரஞ் செட்டியாரவர்கள் B. A., B. L.]

## II அப்பர் சுவாமிகள்

[எட்டாஞ் சிலம்பு ௭௫-ஆம் பக்கத் தொடர்ச்சி]

அப்பர் சுவாமிகள் காலத்தில் வெகு உன்னத நிலையில் இருந்த பல்லவர்கள் இரண்டு மூன்று நூற்றாண்டுகளில் செல்வாக்குக் குறைந்து அழிந்து விட்டார்கள். அதன் பிறகு சோழர்கள் உன்னத நிலைக்கு வந்தார்கள். இவர்கள் தமிழையும் சைவத்தையும் மிகவும் போற்றி வந்தார்கள். தமிழர் நாகரீகத்தை வெளி நாடுகளுக்குக் கொண்டு சென்றார்கள். அக்காலத்தில் எவரும் பிரமித்து ஆச்சரியப்படும்படியான பெரிய ஆலயங்களை நாடு முழுதும் எழுப்பி வந்தார்கள். சிற்ப வேலை வெகு முதிர்ச்சி அடைந்தது. பல்லவர்கள் மலைகளைக் குடைந்து அறைகள் உண்டாக்கி அவைகளில் சித்திரங்களும் தங்கள் விருத்தாந்தங்களையும் எழுதி வைத்தார்கள். ஏனெனில், அவர்கள் காலத்திலும் அவர்களுக்கு முந்தியும் பௌத்தர்களும் ஜைனர்

களும் பிரபலமாயிருந்து தங்கள் மடங்களையும் ஆலயங்களையும் கற்பாறைகளில் செதுக்கிக் கட்டியிருந்த முறையைத் தாங்களும் தழுவினதே காரணம் ஆகும். பல்லவர்கள் பிற்காலத்திலே குகைகள் மாத்திரமே யன்றி சமவெளிகளிலும் கற் கோயில்கள் கட்ட ஆரம்பித்தனர். அதை அனுசரித்துப் பின் வந்த சோழர்கள் அரிய சிற்பங்கள் வாய்ந்ததும் மகோன்னதமானதும் ஆன ஆலயங்களை எழுப்பினர்.

அப்பர் காலத்து ஆலயங்கள் முக்கியமாய்க் கற்குகை ஆலயங்கள் என்று முன் குறித்த திருச்சி, வல்லம் போன்ற உதாரணங்களால் தெரியவரும். அப்பர் காலத்திலேயே அவருடைய முயற்சியினாலே சம வெளிகளில் கோயில் ஏற்பட்டதை குணதரேச்சுரத்தினால் தெரிகிறோம். ஆகவே ஜைனர்களால் ஏற்படுத்தப்பட்ட ஆலய நிர்மாணமானது சைவாசிரியர்களால் பெரிதும் விருத்தி செய்யப்பட்டு சோழர் காலத்தில் உன்னத நிலை அடைந்தது எனலாம்.

அப்பர் ஜீவிய காலத்தில் ஏற்பட்ட கல்வெட்டுகளுக்குப் பின் அவரைப் பற்றிய சாசனம் சோழன் ராஜ ராஜர் காலத்தில் தான் காண்கிறோம். மத்தியில் சற்றேறக் குறைய நான்கு நூற்றாண்டுகள் அவரைப்பற்றிய சாசனங்களே இல்லை. அவரைப்பற்றிய பிரபாவமானது நிலை யூன்றுவதற்கு அத்தனை காலம் ஏற்பட்டதோ அல்லது இராஜரீகப் புரட்சி தான் காரணமோ என்பது அறியக்கூடவில்லை. பொதுவாக மூன்று ஆசிரியர்களான அப்பர், சம்பந்தர் இரண்டு நூற்றாண்டுகளுக்குப் பின் வந்த சுந்தரர் இவர்களைக் குறித்துத் தெய்வத்தன்மையும் ஆசாரியப் பிரபாவமும் ஏற்பட்டதற்கே சில நூற்றாண்டுகள் பிடித்தன போலும்.

மூவர்களும் இருந்த காலத்திலேயே அவர்கள் உலகப் பிரசித்தம் பெற்றிருக்க வேண்டும். அவர்களுடைய திவ்வியப் பாசுரங்கள் எங்கும் பரவி இருக்கவேண்டும். ஆயினும் அவர்களுக்குப் பிந்தி அப்பாசுரங்களைச் சேகரித்து வைக்காததினால் பொது மக்கள் அவர்களைப்பற்றி சிறிது மறந்திருக்கலாம். பிந்தி மூன்று

நூற்றாண்டுகளுக்குப் பின் நம்பியாண்டார் நம்பி என்ற பெரியார் அவைகளைத் தேடி சேகரித்துச் செல்லரித்துப் போனது போக மீதியைத் திருமுறைகளாக வகுத்து வெளியிட்டார்கள். அன்னாருடைய அருந் தொண்டினால்தான் இன்றைக்கும் நமக்குத் தேவாரப் பதிகங்கள் கிடைத்திருக்கின்றன. அக்காலத்தில் சம்பந்தர் பதிகம் ஒன்று திருவிடை வாயிலில் பொறித்திருந்தது. இக்காலத்தில் கிடைத்தது. ஆனால் அதைப் போல் அப்பர் பதிகம் எதுவும் கிடைக்கவில்லை. ஆகவே அப்பரைப் பொருத்தமட்டில் இராச ராசச் சோழர் காலம் மட்டும் கல்வெட்டு கிடைக்காதது நம் துர்ப்பாக்கியம் எனல் வேண்டும். விவிலிய சரிதத்தில் கிறிஸ்து நாதரின் பிரபாவத்தை எவ்விதம் பால் என்பவர் உலகத்திற்கு அறிவித்தாரோ அவ்விதமே மூவர் ஆசாரியர்களின் மகிமையை நம்பியாண்டார் சைவ உலகத்திற்குத் தோற்றுவித்தார் என்று ஒப்புவமையினால் சொல்லக் கூடும். முன்னமே கூறியபடி இராஜ ராஜச் சோழர் 1 உலகப் பிரசித்தியாய் மன்னர் மன்னனாய் ஆண்ட காலத்தில் தஞ்சையில் தன் பெயரினால் இராஜ ராஜேச்சுரம் என்ற பெரிய கற்றளி எழுப்பினார். அதில் சைவ சமயாச்சாரியர்களின் திருவுருவங்களை நிலை நிறுத்தி அவைகளுக்கு அளவிடக் கூடாததான தருமங்களை ஏற்படுத்தினார். தான் செய்த தானங்களைப் பார்த்துப் பின் வருவோர் செய்யட்டும் என்ற நல்லெண்ணத்தினாலும் தான் செய்யும் தானம் பிறர் கவர்ந்து கொள்ளாமல் நிரந்தரமாக ஆலயத்திற்கு இருக்க வேண்டும் என்ற முன் ஜாக்கிரதையினாலும் அவ்வாலயங்களில் அவைகளைத் தெளிவாக வரைந்து விட்டார். அவரது எண்ணம் நிறைவேறிற்று என்றே கூறல்வேண்டும். ஏனெனில் அவருக்குப் பின் வந்த சோழ மன்னர்கள் அவர் செய்ததைப் பார்த்துத் தாங்களும் தானங்களில் ஈடு பட்டார்கள் அல்லவா?

நாம் முன்னமே சம்பந்தர் வரலாற்றைக் கூறின பகுதியிற் கண்டபடி இராஜராஜர் கடைசி ஆண்டு அதாவது ~~1913-14~~ம் ஆண்டில் இராஜராஜேஸ்வர ஆலயத்துக் காணியாளரான ஆதித்த சூரியன் என்ற தென்னவன் மூவேந்த வேளான் என்ற

பிரபு திருஞானசம்பந்தர், திருநாவுக்கரையர், நம்பி ஆரூரனுர், நங்கை பரவையார் முதலான மூர்த்தங்களைப் பிரதிஷ்டை செய்த சங்கதி அக்கோயிலில் அடியிற்கண்டபடி செதுக்கப்பட்டிருக்கிறது. (S. I. I. Vol. II No. 38.)

"ஸ்வஸ்திஸ்ரீ உடையார்
ஸ்ரீராஜ ராஜீசுரம்
உடையார்க்கு ஸ்ரீகார்யம்
செய்கின்ற பொய்கை நாடு
கிழவன் ஆதித்தன் சூர்யனுன
தென்னவன் மூவேந்த வேளான் ஸ்ரீராஜ
ராஜீசுரம் உடையார் கோயிலில்
யாண்டு இருபத் தொன்பதாவது வரை
எழுந்தருளிவித்த செப்பு பிரதிமங்கள்"

உடையார் கோயிலில் முழத்தால் அளந்தும் ரத்னங்கள் சரடு நீக்கி தக்ஷிணமேரு விடங்கள் என்னும் கல்லால் நிறை எடுத்தும் பொன் ஆடவல்லான் என்னும் கல்லால் நிறையெடுத்தும் கல்லில் வெட்டினபடி—

... ... ...
... ... ...
... ... ...

பாதாதிகேசம் இருபத்து இரு விரலே இரண்டு தொரை உசரத்து இரண்டு திருக்கை உடையராகக்கனமாக எழுந்தருளி வித்த திருநாவுக்கரையர் ப்ரதிமம் ஒன்று—இவர் எழுந்தருளி நின்ற இருவிரலே ஆறு தொரை உசரத்து பத்மம் ஒன்று, இதனேடுங் கூடச்செய்த எண்விரலே ஆறு தொரைச் சமசதுரத்து நால்விரல் உசரத்து ஒன்று.

விகுதி

.... .... ...
... .... ...
... ... ...

இவனே திருநாவுக்கரையனுக்குக் கொடுத்தன உருத்ராக்ஷச் சுரி பொன்னின் நூலிற் கோத்த உருத்ராக்ஷம் ஒன்றுட்

பட நிறைஆறு மஞ்சாடியும் இரண்டு மாவுக்கு விலைகாசு ஒன்று உருத்ராக்ஷச் சுரிபொன்னின் நூலிற்கோத்த உருத்ராக்ஷம் 3-ன் உட்பட நிறை ஆறு மஞ்சாடியும் இரண்டு மாவுக்கு விலை காசு ஒன்று, கண்டிகை உருத்ராக்ஷம் ஒன்றும் சுரி ஒன்றும் உட்பட நிறை ஐங்க................மஞ்சாடியும் குன்றிக்கு விலை காசு எட்டு, திருப் பொற்பூ ஒன்று, பொன் முக்காலேநாலு மஞ்சாடியுங் குன்றி திருக்கைக் காரை ஒன்று, பொன் இருகழஞ் திருக்கைக் காரை ஒன்று, பொன் முக்காலே நாலு மஞ்சாடி

... ... ...
... ... ...
.... ... ...

இவன் எழுந்தருளிவித்த திருநாவுக்கரையார்க்குக் குடுத்தன. உருத்ராக்ஷம் பொன்னின் சுரிகட்டிற்று ஒன்றும், நாண் படுகண்ணும் கொக்குவாயும் உட்பட நிறைகழஞ்சே எழு மஞ்சாடிக்கு விலை காசு மூன்று.

... ... ...
.... ... ...

மேலும், அவ்வாதித்த சூரியன் என்பான் 1014-ம் ஆண்டில் சமயாசிரியர் மூவர்க்கும் பெரிய பெருமாளுக்கும் பல தானங்களைச் செய்தது (vol ll No. 41-ல்) அடியிற்கண்ட கல்வெட்டில் கண்டிருக்கிறது.

"ஸ்வஸ்திஸ்ரீ உடையார் ஸ்ரீராஜ ராஜீஸ்வர முடையார்க்கு ஸ்ரீகார்யம் செய்கின்ற பொய்கை நாடு கிழவன் ஆதித்தன் ஸூர்யனான தென்னவன் மூவேந்த வேளான் தான் எழுந்தருளிவித்த நம்பியாரூர னார்க்கும் திருஞானசம்பந்தடிகளுக்கும் திருநாவுக்கரைய தேவர்க்கும் உடையார் ஸ்ரீராஜேந்திர சோழ தேவர்க்கு யாண்டு மூன்றாவது வரை குடுத்த தராநிலை விளக்கு ஒன்று, இருப்பு நாராசம் உட்பட நிறை நாற்பத்தொரு வரை இவனே தான் எழுந்தருளிவித்த பெரிய பெருமாளுக்குக் குடுத்த தராநிலை விளக்கு ஒன்று, இருப்பு நாராசம் உட்பட நிறை நூற்றிருபதின் பலம் வெண்கல மடல் ஒன்று நிறை நாற்பலம்."

இக்கல் வெட்டில் பெரியபெருமாள் என்றது இராஜ ராஜ

ணையேக் குறிக்கிறது. உரோமானிய சக்கிரவர்த்திகளைப் போலவே சோழ மன்னர்களும் தங்கள் பிரதிபிம்பங்களை ஆலயங்களில் வைத்துப் பூஜைசெய்ய ஏற்பாடு செய்தனராம். மேலும், இராஜ ராஜேசுவர் ஆலயத்தில் மூவர் திருப்பதிகங்களும் ஓதுதற்கு 48 பேர்களை ஏற்படுத்தி அவர்களுக்கு ஊதியங்களைத் திட்டம் செய்திருந்ததை முன்னமே சம்பந்தர் வரலாற்றில் கூறியுள்ளோம்.

(S. I. I. Vol. II. No. 65)

இவையெல்லாம் இராஜராஜர் அவர் மகன் இராஜேந்திரர் இவர்கள் காலங்களில் நடந்தேறின. அதாவது, 10-ம் நூற்றாண்டின் இறுதியிலும் 11-ம் நூற்றாண்டின் முதலிலும் அப்பரின் பெருமையும் மகிமையும் எதுகாறும் பரவி இருந்தன என்பது இக் கல்வெட்டுகளால் அறியக் கிடக்கின்றது.

III

நாம் முன்னமே கூறியபடி இராஜராஜர் இராஜேந்திரச் சோழர் இவர்கள் பின்பற்றி வந்த கொள்கைகளையும் செய்கைகளையும் அவர்களுக்குப் பின் ஆண்ட சோழர்கள் கடைப்பிடித்து வந்தார்கள். அவர்கள் 11-வது நூற்றாண்டு முதல் 13-வது நூற்றாண்டு வரை மிகுந்த செல்வாக்கோடு ஆட்சி புரிந்த காலத்தில் அநேக கோயில்களைக் கட்டி அவைகளில் பல தானதர்மம் முதலான திருப்பணிகளை இயற்றியுள்ளார்கள்.

அரசர்களைப் பின்பற்றி செல்வவான்களும் பல திருப்பணிகளைச் செய்துள்ளார்கள். சம்பந்தரைப் பற்றி முன் எழுதியது போலவே அப்பரைப்பற்றி அக்கல்வெட்டுக்களில் கிடைத்துள்ள சங்கதிகளைப் பாகுபடுத்தி இங்கே கூறுவோம்.

(a) நாயனார் பெயர்கள்.

(1) திருநாவுடைய பிள்ளையார்—தஞ்சை ஜில்லா—சூலமங்கலம்—294/1911.

(2) திருநாவுக்கரையன்—தஞ்சை—திரு மெய்ஞ்ஞானம்—330/10.

(3) திருநாவுக்கரசர்—தஞ்சை—திருவீழிமிழலை—402/08.

(4) திருநாவுக்கரசு தேவர்

(i) தென் ஆற்காடு—தீர்த்த நகரி—121/04.
(ii) செங்கல்பட்டு—திருக்கச்சூர்—316/09.
(iii) சித்தூர்—அகஸ்திய கொண்டா—556/06
(iv) ராமநாதபுரம்—திருப்பத்தூர்—117/08.

(5) திருநாவுக்கரசு நாயனுர்—தஞ்சை—கோவிலூர்—186/08-இந்தக் கல்வெட்டில் சப்பந்தரை "பிள்ளையார் நாயனுர்" என்று குறிக்கட்பட்டுள்ளது. (முந்திய கட்டுரையில் குறிக்காமல் விட்டிருக்கிறது.)

(6) வாகீசர்

(i) மதுரை—கீரனுர்—586/93.
(ii) தென் ஆற்காடு—திரு அதிகை—49/03

7. வாகீசுரதேவர்—செங்கல்பட்டு—திருவொற்றியூர்—207/12
8. எம்பெருமக்கள்—சேலம்—ஆறகலூர்—418/13.

இப்பெயர் மூவருக்கும் பொதுவாகக் குறிக்கப்பட்டுள்ளது. ஆகவே மூவருக்கும் கொள்ளவேண்டும்.

இப்பெயர்களைக் கவனித்தால் அப்பருடைய பிள்ளைத் திருநாமமாகிய மருணீக்கியார் என்பதும், இக்காலத்தில் சாதாரணமாய் வழங்கும் அப்பர் என்ற பெயரும், சோழர் காலத்தில் வழக்கத்தில் இருக்கவில்லை எனப் புலப்படும். திருநாவுக்கரசு, வாகீசர் என்பவைதான் பெரும்பாலும் வழங்கி வந்தன எனலாம்.

(b) நாயனுர் கோயில்கள் அவைகளுக்கு ஏற்பட்ட தானங்களும் காலமும்.

1. 1014 கி. பி.—ராஜராஜன் I 29-ம் ஆண்டு—தஞ்சை இராஜராஜேசுவரும் உடையார் கோயில். அப்பர் முதலிய எழுவர்—பிரதிமைகளைக் கோயிலில் தாபித்ததும் தானம் தந்ததும் (முன் பாராவில் எழுதப்பட்டது.) 98/1888.

2. 1017—இராஜேந்திரன் I 3-ம் ஆண்டு ஷை கோயில் அப்பர் முதலிய 4 பிரதிமைகளுக்கு இரண்டு திருவிளக்குகளும் வெண்கல மடல் ஒன்றும் தானம் செய்தது (முன் குறித்தது.)

3. 1158 மார்ச்சுமீ 26உ புதன்கிழமை இராஜராஜ

தேவ II 12-வது ஆண்டு தஞ்சை ஜில்லா திருவலஞ்சுழி, கபர்தீசுவரர் ஆலயம். திருநாவுக்கரசு தேவர், திருவாதவூர் அடிகள், திருக் கண்ணப்ப தேவர் இப்பிரதிமைகளுக்குப் பூதானம் செய்தது—528/02.

4. 1178—1216. குலோத்துங்கச் சோழன் III ஆண்டு அழிந்து போயிற்று. செங்கல்பட்டு திருக்கச்சூர் ஆலயத்து அஞ்சனாக்ஷியம்மன் ஆலயம். திருநாவுக்கரசு தேவர் பிரதிமை தாபித்ததைக் குறிக்கிறது. 316/1909

5. 1192. திரிபுவன சக்கரவர்த்தி வீரராஜேந்திர சோழர் 14-ம் ஆண்டு சித்தூர் அகஸ்தியர் கொண்டா அதில் இராணியான உத்தம சோழ கங்கை என்ற செல்வ கங்கை என்பவள் திருநாவுக்கரசு தேவரைத் தாபித்து, பிரதிஷ்டை செய்தது. இராணியின் பெயரைக் கொண்டு அரசனது சரியான பெயர் குலோத்துங்கன் III என்று சரித்திரக்காரர்கள் சொல்லுகிறார்கள். மேலும் வீரராஜேந்திரன் சரியான பெயராக இருந்தால் அவன் காலம் 1062 ஆகும். ஆனால் அவன் 12வருடம் ஆளவில்லை. 559/1906.

6. 1255 இராஜேந்திர III 10-ஆண்டு தஞ்சை கோவிலூர் மந்திரபுரீசுவரர் கோயில் பிள்ளையார் நாயனார் (சம்பந்தர்) திருநாவுக்கரசு நாயனார் இவர்கள் கோயில்களுக்குப் பூதானம். அரசன் பெயர் இராஜேந்திர சோழ தேவன் என்று மாத்திரம் குறித்திருக்கிறது. ஆனால் அதற்கு மேலும் கீழும் உள்ள சாசனங்களைப் பார்த்ததில் இராஜேந்திரன் III-வது இருக்கவேண்டும் என்று உத்தேசம் ஏற்படுகிறது. இராஜேந்திரன் I ஆக இருக்கும் பட்சத்தில் ஆண்டு 1023 ஆகும். 186/1908.

7. 1367—ஜடாவர்மன் வீரபாண்டியன்—14-ம் ஆண்டு திருநெல்வேலி ஜில்லா, சேரமாதேவி அப்பர் ஆலயத்து சுவர்: இவ்வாலயத்துச் சுவரில் மேல் சொன்ன வீரபாண்டியன் சாசனத்தைத் தவிர 1463 சகம் இட்டதொன்றும், விஜய நகரத்து ஸ்ரீரங்க தேவ மகா ராயனுடைய தொன்றும் இருக்கின்றன. இவ்வாலயம் அப்பர் பெயராலே இருப்பது நோக்கத்தக்கது. 185, 186, 187/1895.

8. 1271—மாறவர்மன் வீரபாண்டியன் 9-ம் ஆண்டு—தென் ஆற்காடு தீர்த்த நகரி—சிவாங்குரேஸ்வரர் கோயில். இதில் திருநாவுக்கரசுதேவர் திருவிழா முதல் 12 திருவிழாக்களுக்காக வரிகளைத் தானம் செய்தது. இக்கோயிலில் அப்பர் முதல் நால்வர்களுடைய உருவங்களும் சிறப்பிக்கப் பெற்றுள்ளன. 121/04.

9. 1295—விக்கிரம பாண்டியன் 12-ம் ஆண்டு இராமநாதபுரம் ஜில்லா திருப்புத்தூர் ஆலயம் கைலாசமுடையார் கோயிலில் திருநாவுக்கரசு தேவர் பிரதமையை ஒரு தேவரடியாள் தாபித்துப் பணம் தானம் செய்தது. 117/08.

10. 1396—ஜடாவர்மன் பராக்கிரமன் 12-ம் ஆண்டு தஞ்சை சூலமங்கலம் - கிருத்திவாகேசுவரர் ஆலயம். தானவினோத நல்லூர் திருநாவுடையான் என்பவன் கரியுதிர்த்த நாயனார் ஆலயத்தில் திருநாவுடைய பிள்ளையார் பிரதிமை தாபித்தது. 294/11.

மேலே காட்டிய கல்வெட்டுகளிலிருந்து நாம் அறியக்கூடியவைகளை இங்கு எடுத்துரைப்போம். முதல் இரண்டு சாசனங்கள் இராஜராஜர் 1 இராஜேந்திரர் 1 என்பவர்களுடையவை. அவர்களுக்குப்பின் கி. பி. 1158 முதல் 1396 வரை எட்டு சாசனங்கள் கிடைத்திருக்கின்றன. சம்பந்தரைப் போன்று அதிகமான சாசனங்கள் இதுவரை கிடைக்கவில்லை. அதிலும் சைவ சமயத்தில் ஈடுபட்டும் சேக்கிழாரால் போற்றப் பெற்றவருமான குலோத்துங்கன் I என்பவர் காலத்தில் அப்பர் சுவாமிகளைப்பற்றி ஏன் சாசனங்கள் ஏற்படவில்லையோ அறிகிலோம். 1017 முதல் 1158 வரை ஏறக்குறைய 140 வருட காலம் யாதொரு ஆலய சாசனமும் கிடையாதது வியப்பாக இருக்கின்றது. அப்பர் சிலைகளை நாட்டினதில் முயற்சி எடுத்த அரசர்களின் விவரம் காலக்கிரமமாக இங்கே குறிப்போம்.—

| அரசர் : | காலம் : | சாசனம் : |
|---|---|---|
| இராஜ ராஜர் I | 985—1013 | 1 |
| இராஜேந்திரர் | 1013—1045 | 1 |
| இராஜராஜ II | 1146—1178 | 1 |

| | | |
|---|---|---|
| குலோத்துங்கன் III | 1178—1216 | 2 |
| இராஜேந்திரன் III | 1245—1267 | 1 |
| ஜடாவர்மன் வீர பாண்டியன் | 1253— | 1 |
| மாறவர்மன் வீர பாண்டியன் | 1262— | 1 |
| விக்கிரம பாண்டியன் | 1283— | 1 |
| ஜடாவர்மன் பராக்கிரம பாண்டியன் | 1184— | 1 |

ஆகவே சோழ வம்சத்தினர் ஐவரும் பாண்டியர்களில் நால்வரும் அப்பர் சிலைகளை ஸ்தாபனம் செய்து தானங்கள் புரிந்திருக்கிறார்கள். சோழர்களைக் காட்டிலும் பொதுவாக சைவ சமயத் திருப்பணிகளில் பாண்டியர்கள் குறைந்த ஊக்கம் கொண்டவர்கள் என்று கல்வெட்டுக்களினால் தெரியவரும். ஆயினும் அப்பர் விஷயத்தில் மத்தியகாலப் பாண்டியரில் மூவரும் மகம்மதிய படையெடுப்பிற்குப் பின் வந்த பாண்டியரில் ஒருவரும் திருப்பணிகள் செய்ததை இங்குக் குறிப்பிடத்தக்கதே.

மேலும் அப்பர் சுவாமிகள் அவதார ஸ்தலம் ஆகிய திருவாமூர் என்ற இடத்தில் அவரைப் பற்றிய யாதொரு கல்வெட்டும் கிடைக்கவில்லை. இப்பொழுதும் கூட அந்த ஸ்தலத்தை எவரும் கவனிப்பது கிடையாது. அது திரு அதிகைக்கு 4 மைல் தூரத்தில் உள்ளது. ஆலயம் மிகச் சிறிது. அதைக் கவனிப்பவர் இன்றி சீக்கிரத்தில் அழியும் நிலைமையில் இருக்கிறது. அப்பர் சுவாமிகள் அந்த தலத்தில் நெடுங்காலம் இராமையினலே அது பிரசித்தி பெறவில்லை போலும். இனி அப்பர் அருள் பெற்று நீண்ட காலம் வாழ்ந்த தலமாகிய திருவதிகை வீரட்டானத்தைப் பற்றிக் கூறும் போது இந்த தலத்திலும் இனி அடுத்த குறிப்பில் குறிப்பிடப்போகும் ஒரு கல்வெட்டைத் தவிர இதர கல்வெட்டுகள் கிடையா. அக்கல் வெட்டானது குலோத்துங்கன் என்ற மன்னன் காலத்தில் அங்கு இருந்த வாகீசர் மடத்தைக் குறிக்கிறது. இந்த தலம் வெகு பழமையானது. ஏனெனில் இந்த ஆலயத்தில் பல்லவ மன்னர்

நந்தி போத்தரையன், பரமேசுவர போத்தரையன், இராஷ்ட்ர கூட அரசன், கன்னர தேவன் முதலானவர்கள் கல் வெட்டு களும் பல சோழ பாண்டியர்கள் கல் வெட்டுகளும் இருக்கின் றன. மேலும் ஆலயத்தின் பிரகாரத்தில் ஒரு புத்தக் கல்சிலை வைக்கப்பட்டிருக்கிறது. இச்சிலை எவ்விதம் வந்தது, எக்காலத் தில் வந்தது என்பதைப்பற்றித் தெரிவிப்பார் இல்லை. அர்ச்சகர் கள் அப்பரை இம்சைப் படுத்திய சமணராஜன் என்று அத னைச் சொல்லுகிறார்கள். இது தப்பு என்று உருவத்தைக் கண்ட மாத்திரத்தில் கூறமுடியும். அப்பர் சுவாமிகள் முற்றும் துறந்த துறவியாய் இருந்ததினால் அவரைப்பற்றி அக்காலத்தார் சாசனங்களின் வாயிலாக அதிகமாகப் பிரசித்தி செய்யவில்லை போலும். ஆனால் அப்பர் இளமைப் பருவத்தில் வசித்த தென் ஆறுகாடு ஜில்லாவில் மற்றொரு தலமாகிய தீர்த்தகிரியில் அப்பர் சிலை நாட்டப் பெற்றதுமன்றி 13 வது நூற்றாண்டில் அப்பரு டைய திருவிழாவும் நடந்து அதற்காகத் தானமும் செய்யப்பட் டிருந்தது ஆராயத்தக்கது. இனி அப்பருடைய முத்தித் தல மாகிய திருப்புகலூரிலும் அவர் நெடுங்காலம் மடம் கட்டி வாழ்ந்த திருப்பூந்துருத்தியிலும் யாதொரு கல் வெட்டுகளும் இல்லாதது வியப்பாக இருக்கிறது.

அரசர்களே யன்றி அரச உத்தியோகஸ்தர்களும், செல்வ வந்தர்களும், தேவரடியார்களும் சிவ கைங்கரியத்தில் ஈடு பட்டு அப்பர் சுவாமிகளின் பிரதிமைகளைத் தாபித்துத் தானங்களை வழங்கினதாகக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.

சோழ பாண்டிய மன்னர்களுக்குப் பின்னிட்டு இத்தமிழ் நாட்டை ஆண்ட விஜய நகர மன்னர்களும் அவர்கள் பிரதி நிதி களான நாயக்கன் மார்களும் சமயாசாரியர்கள் விஷயத்தில் யாதொரு சிரத்தையும் எடுத்துக் கொண்டதாகத் தெரியவில்லை. அரசர்கள் போற்றுதல் கிடையாததினாலே பொது மக்களும் அவர்கள் காலத்தில் இத்திருப்பணிகளில் ஈடுபட்டதாகத் தெரிய வில்லை. (தொடரும்)

# பெண்ணரசு

[திரு. அ. சிதம்பரநாதன் அவர்கள் பீ. ஏ.]

சிவானந்த விளைவு என்னுமோரூரிலே பவானந்தமென்ருெருவனிருந்தான். அவன் மனையாளின் கண்கள் மைகண்டறிந்தில; அவள் அடிகள் செம்பஞ்சறிந்தில; இருகைகளோ வரிவளை யறிந்தில; கூந்தலோ மொய்ம்மலர் அறிந்திலது. அவள் மார்போ பாலொடு வறந்து பசியொடு வெதும்பித் தோலொடு திரங்கிச் சுருங்கியதொன்று. பாலுமின்றி, ஊனுமின்றி, உறக்கமுமின்றித் துடிதுடித்தேங்கி, நோக்கான் மழைபொழிந்து கிடக்கும் அவர் மக்களுக்கோ அளவிலை. நரம்பு மெலும்பும் எண்ணத்தகும்படி மெய்ந்நிறைந்து, ஈயாவன்கணர் என்னுந் தோளாற் கொட்டப்பட்டு, 'நெடும்பசி யென்னுங் கொடும்புலி யிரைகொள' நின்ற அம்மக்கள் 'ஆயே ஆயே ஈயாய் கூழென' நின்ற காலை, அவள் கவற்சி கொண்டு கதறுவதன்றி என்செயக்கூடும்? கல்லாவறிவுடைப் பொல்லா மூர்க்கர் தாங் கொடாவிடினும் தடுப்பதை நினைத்து அழுகுவள்கொல்லோ? "வறியவர்க் காணின் மொறு மொறுத்திகழ்ந்து பகைத்தவரென்னத் திகைத்தெதிர் நோக்கி, இஞ்சிதின்ற வெஞ்சினக்குரங்கென அகங்கெட வாளா முகங் கடுகடுத்துக் கல்லெறிந்தென்ன வல்லுரை கூறி, நாய்போல் குரைத்துப் பேய்போல் குனித்துத் தள்ளெனத் தள்ளித் தலைக்கடை யடைக்கும்" புல்லறிவு செறிந்த சோறு நிறைத் துருத்தியைக் குறித்து வருந்துவள் கொல்லோ? அன்றன்று. "வாழ்ந்தார்க்குறவு வழியினுமுண்டு, தாழ்ந்தார்க்குறவு தமரினுமின்று" என்றும், "அன்றிடார்க்கு இன்றிலை" யென்றுமே நினைப்பதுண்டு. பவானந்தமோ மடியென்னும் பேயாற் பிடிபட்டவன்; உழைத்துப் பிழைக்க முயலாதவன். அவற்கு நாழிகை யென்பது நாள் போற்றோன்றும்; நாளென்பது ஒரு மாதம்; மாதமென்பது ஓராண்டு. நாட்செல நாட்செல தாட்சியே மிகுந்தது; பலமெனும் பெயருடையொன்றும் பஞ்சியாய்க் கழிந்தது.

ஒரு நாள் அவன் தன் மனைவிமுக நோக்கிக் கூறினன்:—

பெண்ணரசே! "பொருளல்லாரைப் பொருளாகச் செய்யும் பொருளல்லதில்லை பொருள்." ஆனால், அப்பொருள் தானும் என்னால் தேடக்கூடிய தொன்றல்ல. நீயோ பாக்கியவதி; கற்பரசி; அருந்ததி. என்னையன்றித் தெய்வத்தையுந் தொழுது நீ வருவதால் நீ வேண்டுமென்று நினைக்குமுன் எப்பொருளுங் கிடைத்து விடுமே. ஆ! உன்னன்பே அன்பு. படிமிசைக் காசு கொடுத்த அவ்வள்ளலாஞ் சிவனை வழிபடு முனக்கு எதுவும் அரிதல்லவே. உன்னைப்பெற்ற நான் பெருந்தவம் புரிந்திருக்க வேண்டும். என்னைப்பெற்ற நீ என் குறிப்பறிந் தொழுக வேண்டாமா? குறிப்பைக் குறிப்பாற் கூறுது விளங்கக் கூறி விடுகிறேன். வழக்கம்போற் கோயிலுக்குப் போவதற்கு முன்னரே இன்று போய் நீ வழிபடுந் தெய்வத்தை வேண்டி வருக."

"நாதா! அவ்வாறே செய்கிறேன்" என்று சொல்லிப் பெண்ணர- செழ, அவளைப்பற்றி யிழுத்துச் சொன்னான் பவானந்தம்:—"இன்று நீ வேண்டுவது என்றும் போலிருத்தலாகாது. நாலாறும் ஆறுய் நனி சிறிதாய் மேலாறு மேலுறை சோரும் இக்குடியில் வாழ்வதை விட அவிவது மேல். இன்று நீ அக் கடவுளை நமக்கு ஒரு நல்ல குச்சு வீடும் அவ்வீட்டிற் கேற்ற பல வகைப் பண்டமுந் தருமாறு மன்றுடிக் கேட்டு வாங்கிவர வேண்டும்."

'நாதா! வேண்டுவார்க்கு வேண்டியாங்கு ஈவார் கடவுள் ஆயினும் வேண்டுந் தகுதியுடையோமா நாம்? அன்றியும், வேண்டத் தகுவதை யறிவோமா நாம்? என்றாள் பெண்ணரசு.

"என் சொற்படி நடக்க நீ மறுப்பது நீதியோ? கேட்டதைக் கொடாவிடிற் கடவுளும் பெரிதோ? என்ற பவானந்தத்தின் சொற்கள் பெண்ணரசின் மனத்தைத் தைத்தன.

"செய்தீ வினையிருக்கத் தெய்வத்தை நொந்தக்கால் எய்த வருமோ இரு நிதியம். அவரவர் திறமறிந்து அவரவர் வினைக்கேற்ப அருளும் அருட்பெருங் கடலைக் குறை கூறவேண்டாம். நாதா" என்ற பெண்ணரசின் பேச்சைக் கேட்டு, "நீ சிறந்த உத்தமி; உன்னன்புக்கோரளவில்லை. அன்புடையார்க்கருளும்

அவனை நீ வேண்டின் அருளாது விடான். போய்ப்பெற்றுவா" எனக் கூறினான் அவள் கணவன்.

ஏதோ கேட்டுப் பார்க்கலாம் என்று நினைத்துப் போந்த பெண்ணரசு கோவில் புக்கு வணங்கி, "பால் நினைந்தூட்டுந் தாயினுஞ் சாலப் பரிந்தருளும் பரம் பொருளே! எளியேன் கொழுநன் வேண்டுவ தொன்றுண்டாம். அருளத்தகுமேல் அருள்வாய். நல்ல குச்சு வீடும் பல பண்டங்களும் வேண்டுமாம். நான் என் செய்வேன்? எங்குறுவேன்? கருணாநிதி! சரணம்" என்று விழ, 'அங்ஙனமே' என ஒரு வாக்குப் பிறந்தது.

அவ்வாக்கைக் கேட்டுச் சென்ற பெண்ணரசு இல்லம் நோக்கிச் சென்றுழி இல்லமில்லாததைக் கண்டு அச்சமுற்றுத் தயங்கி நின்ற வேளையில், உள்ளிருந்து வெளிவந்த தன் மக்களைக்கண்டு அதுதான் புத்தில்லமோ என நினைத்துச் சென்று பார்க்க, உள்ளே பண்டங்கள் நிறைந்திருப்பதையும் கணவன் மகிழ்வுடன் உண்டிருப்பதையுங் கண்டாள்.

"நீயே வல்லவள்; நீயே சத்தி எனப் புகழ்ந்து கொண்டாடி அவளோடு கூடி யிருந்து சின்னாட் கழிந்தபின் அவளை நோக்கிக் கூறினான் பவானந்தம் :—கடவுள் நல்லவர்தான். நீயும் நல்லவள். உனக்கு அவர் அருளாது விடுவாரோ? இக் குச்சு வீடு அவ்வளவு இன்பந்தரவில்லை. ஒரு மச்சு வீடாயிருந்தால் மேல் மச்சு வீடு வேண்டுமென நீ வேண்டின் வாராதிருக்குமோ! போய் வா?

"நாதா! நாம் முன்னிருந்த நிலைமை யென்ன? இது போதுள்ள நிலைமை யென்ன? இப்போதுள்ள நிலைமை யென்ன? என்பதைப் பார்த்தால் இதுவே போதுமென என் மனம் புகலுகிறது," என்று சொல்லவும் யொருஅனுக் கூறினான் பவானந்தம்:—"போதுமென்ற மனம் பொன் செய்யாது. என் மனம் வேறு உன் மனம் வேறாக இருத்தல் தகுதியோ? இன்னே போய் முன்னே சொன்னதைக் கேட்டுக் கொன்னே வாராது கொண்டுவா,"

என் செய்வாள் பெண்ணரசு! சென்றாள் கோவிலுக்கு; இறைஞ்சினாட் கோவிலை. 'அத்தனே யண்டரண்டமாய் நின்ற ஆதியே! யாதுமீறில்லாச் சித்தனே! பத்தர் சிக்கெனப்பிடித்த செல்வமே! சிவபெருமானே! பித்தனே போன்று பிதற்றி நின்றிடும் புழுத்தலைப் புலையேன் தலைவன் வேண்டுவதொன்றுண்டாம். அதுதான் ஒரு மச்சு வீடு. அருளுவையோ" எனக் கூறி முடிக்குமுன் 'அருளினேம்' என்ற உருவின்றித் தோன்றிய வாக்கைக் கேட்டு வியந்து குச்சுவீட்டை நோக்கிச் சென்ற அவள் மச்சு வீட்டைக் கண்டாள்.

அம்மச்சு வீட்டில் வாழ்ந்துவரும் நாளில் ஒருநாள், அவள் கணவன் அவளை நோக்கிப் "பெண்ணமுதே இன்று காலை இவ் வீட்டு மாடத்தின் மீதேறி நின்றபொழுது என் மனத்தொன்றுதித்தது. சுற்றுப்பட்ட பல வீடுகளையும் அங்குள்ளாரையும் கண்ட ஞான்று அங்குள்ளார் யாவர்க்கும் அரசாக வேண்டும் என்று எனக்குத் தோன்றிற்று. அவ்வெண்ணத்தை நிறைவேற்றி வைக்க வேண்டிய துன்கடன். நீ நல்ல அடியாள் அல்லவா? அடியார்க்கருளும் ஆண்டவன் உனக்கு அருளாது விடான். கடிதிற் போய் வேண்டி நொடிதிற் றிரும்பிவா" என்றான். கேட்ட பெண்ணரசு திகைத்து, "நாதா! அத்துன்பம் நமக்கெதற்கு? வேண்டுவது எல்லாம் வந்தும் விடுமோ? அன்றியும், அடியவரென்றால் ஆண்டவனிடம் ஒன்று வேண்டுதல் தகுமோ? இன்னது செய்ய வேண்டுமென்று ஆண்டவனைக் கேட்க அடிமைக் கென்ன உரிமையுண்டு? அவ்வாறு கேட்பின் 'அடிமை சால அழகுடைத்தே!' நீங்கள் ஏனிவ்வாறு பேரவா கொள்கிறீர்கள்? வேண்டாம், நாதா, வேண்டாம், நாதா; உள்ளது போதும்; கொள்ளை வேண்டாம்" என்று சொல்லுமளவில், இடையிற் கூறினான் பவானந்தம், "கணவன் வேண்டுவதற்கு மாறாக நடத்தல்தான் பெண்டிர்க் கழகோ! பெண்டிர்க்கழகு கணவன் சொற்றிறம்பாமை யன்றோ! காரெனப் போய் யாருக்கும் அரசெனும் வரம் வாங்கி வா."

'இருதலைக்கொள்ளி யெறும்புபோல் எங்கிய மனத்துடன்

பெண்ணரசு சென்று பண்ணொடு பாடிக் *"கண்காட்டும் நுதலானே, கனல் காட்டுங் கையானே, பெண் காட்டும் உருவானே, பிறை காட்டுஞ் சடையானே, பண்காட்டும் இசையானே, பயிர் காட்டும் புயலானே, வெண்காட்டில் உறைவானே விடை காட்டுங் கொடியானே! மண்ணினில் மன்னனாக விழையும் என் கொழுநன் வேண்டுகோள் குறித்து ஈண்டு நின்றனன். திருவுளமெப்படியோ,, என்று சொல்லுங்கால், "அவன் அஃ தானான் என்றதோ ரொலி யெழுந்தது.

குச்சு வீடு போய் மச்சு வீடு வந்தது. மச்சு வீடுபோய் மாளிகை வந்தது. மாளிகையில் மன்னனென சிங்காதனத்துச் சிறப்புடன் வீற்றிருந்த பவானந்தத்தின் மகிழ்ச்சியையும் அவன் பெண்ணரசைப் புகழ்ந்ததையும் எழுத இடமில்லை. அவன் புகழ்ந்ததுவும் வெற்றுக்கன்று. புகழ்வதெல்லாம் ஒன்று வேண்டியன்றோ! மன்னனாய் விளங்கிய அவன் வேண்டக்கூடியது முண்டோ? இவ்வினாவுக்கு விடை அவன் ஒருநாள் பெண்ணரசிடம் சொல்லியதைக் கூறினால் அறியக்கூடும். அவன் கூறியதியாதெனின், "நாம் மன்னனாயிருந்தாலும் எம்அடி எல்லாரும் பணிகின்றாரில்லை. நாம் இந்நாட்டிற்குக் குருவாக ஆகப்பெறின், பணியாரு மிருப்பரோ! விரைவினிற் சென்று வேண்டியதைப் பெற்று வா" என்பதாகும். "நாதா! இது தங்கள் நன்மைக்குமன்று; என்னன்மைக்குமன்று; நம் மக்கள் நன்மைக்குமன்று. முன்னிருந்த நிலையை யுன்னிப் பாருங்கள். பல்லை யிளித்துக் கையைக் கட்டி வாயைப் பொத்தி நின்ற நாம் இப்பொழுது அடைந்துள்ள நிலைமையை எண்ணினால் வியப்பாகவே யிருக்கிறது. கொண்டதைக் காத்துச் சிறந்ததைச் செய்து போகும் வழிக்கு நல்வழி தேடுவதை விட்டு யாவரும் நம்மடிமையாக வேண்டும் என்று நினைப்பது நன்றன்று, நன்றன்று. நன்றல்லதை நினைத்தலே பிழை. விட்டுவிடுங்கள்" எனப் பெண்ணரசு வேண்டி நின்றாள்.

எனினும், கணவனாலுந்தப்பட்டுச் சென்று கோவிலை நண்

---

* திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் தேவாரம்.

ணிப் "போற்றியோ நமச்சிவாய புயங்கனே மயங்குகின்றேன், போற்றியோ நமச்சிவாய புகலிடம் பிறிதொன்றில்லை, தேற்று வாய் வந்துதானே தெளிந்திடா எளியனேனை, ஆற்றுவாய் குருவதாக அடியனேன் கணவன்றன்னை" என்று கதறியபெண் ணரசு அங்ஙனமே என்ற குரலைக் கேட்டு மீண்டனள்.

பின்னொருநாள், பவாநந்தம் உறங்கிக்கொண்டிருந்த தன் மனைவியைத் தட்டி யெழுப்பிக் கூறினான்:—"எனக்குப் பின் றூங்கி முன்னெழாது நீ உன் மனம் போனபடி உறங்குவ தழ கல்ல. இரவெல்லாம் நான் கண்ணிமைக்கவில்லை. என்ன முயன்றும் பயனில்லை. யான் பெற்றுள்ள இத்துன்பத்தைப் போக்காது நீ யுறக்கங் கொள்ளலாகாது. உலகமெல்லாம் நான் ஒரு தனி கோலோச்சி, உள்ள மன்னர் முடியெல்லாம் என்னடி பட்டுத் தேடிய நாள் எந்நாளோ அந்நாள்தான் எனக்கு உறக்கம் வரும். மன்னர் பதவி பெரிதல்ல; சமயகுரு பதவி பெரிதல்ல; உலக மன்னர் மன்னனாவதே என் விழைவு. கோவில் நுழைந்து என் விழைவைக் கூறிப் பதவியைப் பெற்றுவா."

கேட்ட பெண்ணரசு நகைத்துத் திகைத்து, "என்ன! சனியன் பிடித்ததோ? ஒன்றுக்குமேல் ஒன்றை வேண்டித் தாவி எட்டாப் பழத்துக்குக் கொட்டாவி விடுவதென்னை? கடவுளருளால் ஏதோ வேண்டுகோட்படி சிலவற்றை யடைந்த மாத்திரத்தால் எதையும் அவரை வேண்டுவது அழகல்ல. வேண் டினாலும் பெறுவது திண்ணமோ? உள்ளது போது மென் பதே என்னெண்ணம். மன்னர் மன்னனாவதால் என்ன பயன்? இன்பம் எவ்வழியிற் பெருகப் போகிறது? சிறிது பெருகு மென்று வைத்துக் கொண்டாலும் துன்பப் பெருக்குக்கோ அளவில்லை. நாம் இனி மேலே வேண்டுவது நமது கேட்டுக்கே யாம்" என்று கூறினாள். "நான் விழைந்ததை யழைத்து வராது என்ன நீ பிதற்றுகிறாய்? நாயகன் ஒன்று கூற நாயகி பிறிது மொழிதல் நன்றன்றே. போகாது என் முன்னின்றால் உன்னுடல் உனதன்று" என்று கூறி யையப் புடைத்தனுப் பினான் பவானந்தம்.

கோவிலுக்குச் சென்ற பெண்ணரசு இம்முறை இவ் வேண்டுகோளைக் கேட்கும் எண்ணத்தோடு சென்றிலளாயினும் அங்குச் சென்றதும்,

அருளுடைச் சுடரே யளிந்ததோர் கனியே
பெருந்திறல் அருந்தவர்க் கரசே
பொருளுடைக் கலையே புகழ்ச்சியைக் கடந்த
போகமே யோகத்தின் பொலிவே
தெருளிடத் தடியார் சிந்தையுட் புகுந்த
செல்வமே சிவபெரு மானே
இருளிடத் துன்னைச் சிக்கெனப் பிடித்தே
னெங்கிருந் தருளுவ தினியே''

என்றுபாடி, "நீயே கதி. நீயே என் கணவன் வேண்டுவதைத் தரல் வேண்டும்" என்று சொல்லுமளவில், "முன்னிலையே தான் போ" என்ற வாக்கு எழுந்தது. மன்னர் மன்னன் பதவி பெறுது மன்னன் பதவியோடே தன்னாயக னிருப்பா னென்று நினைத்து அரண்மனை நோக்கிச் சென்ற பெண்ணரசு கண்ட தென்ன! முன்னாட் குடிசிலில் பன்னாட் கழித்ததுபோல் "ஆயே ஆயே ஈயாப் கூழெனக் கதறி நின்ற மக்களையும், "பேயோ பிறிதில நானே பேயன்" என்று கூறிக் கண்ணீருங் கம்பலையுமாய் நின்ற பவானந்தத்தையுமே கண்டாள். கண்ட வள் மனங் கருதிய தென்னவோ; விண்டதைச் சொல்ல அறிபவனுண்டோ?

"ஒருகால், ஆசை யெனும் பேய் பிடித்தாட்டிற்றே, "பேராசை பெரு நட்டம்' என்ற முது மொழிகளை நினைவு கூறிக் கொண்டிருப்பள் கொல்லோ? அன்றி,

"உத்தி வாளரா முடித்தபால் வண்ணனே உனது
பத்தி வேண்டுவ தன்றியே நரகிடைப் படினும்
முத்தி வேண்டிலேன் துறக்கமும் வேண்டிலேன் முனிவர்
சித்தி வேண்டிலேன் வேண்டிலேன் திசாதிபர் சிறப்பே''

என்று சொல்லத் தெரியாமற் போனதைக் குறித்து வருந்தி யிருப்பள் கொல்லோ? பிறவாமை வேண்டும், மீண்டும் பிறப் புண்டேல் நினை மறவாமை வேண்டும்" என்று வேண்டாது போனதற்கு வருந்தியிருப்பள் கொல்லோ?

"வேண்டத் தக்க தறிவோய்நீ வேண்ட முழுதுந் தருவோய்நீ
வேண்டு மயன்மாற் கரியோய்நீ வேண்டி யென்னைப் பணிகொண் [டாய்
வேண்டி நீயா தருள்செய்தா யானு மதுவே வேண்டினல்லால்
வேண்டும் பரிசொன் றுண்டென்னி லதுவு முன்றன் விருப்பன் [றே."

என்ற மணிவாசகப் பெருமானின் மணிவாசகத்தை மனதிற் பதித்துக்கொண்டிருப்பள் கொல்லோ?

"ஒன்றும் போதா நாயேனை யுய்யக் கொண்ட நின்கருணை
இன்றே யின்றிப் போய்த்தோதா னேழை பங்கா எங்கோவே
குன்றே யனைய குற்றங்கள் குணமா மென்றே நீகொண்டால்
என்றான் கெட்டது இரங்கிடா யெண்டோள்முக்க ணெம்மானே"

என்று அப் பெம்மானை நோக்கிக் கூறியிருப்பள் கொல்லோ? அன்றி,

"எழுதியவா றேகா ணிரங்குமட நெஞ்சே
கருதியவா றாமோ கருமம்—கருதிப்போய்க்
கற்பகத்தைச் சேர்ந்தார்க்குக் காஞ்சிரங்கா யீந்ததேல்
முற்பவத்திற் செய்த வினை"

என்ற மூதுரையை நினைத்திருப்பாள் கொல்லோ? இனி,

"வேண்டேன்புகழ் வேண்டேன்செல்வம் வேண்டேன்மண்ணும் [விண்ணும்
வேண்டேன்பிறப் பிறப்புச்சிவம் வேண்டார்தமை நாளும்
தீண்டேன்சென்று சேர்ந்தேன்மன்னு திருப்பெருந்துறை யிறை [தாள்
பூண்டேன்புறம் போகேனினிப் புறம்போகலொட் டேனே"

என்றாங்குச் செய்ய நினைவுண்டாயிருக்குங் கொல்லோ? அன்றி

"உற்றாரை யான்வேண்டே னூர்வேண்டேன் பேர்வேண்டேன்
கற்றாரை யான்வேண்டேன் கற்பனவு மினியமையுங்
குற்றாலத் தமர்ந்துறையுங் கூத்தாவுன் குரைகழற்கே
கற்றாவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே"

என்று சிவானந்த முதிர்வால் துறவரசு புலம்பியாங்குப் புலம்பி யிருப்பள் கொல்லோ? யாதெனக் கூறுவது?

# நூற்கல்வி

[காழி. சிவ. கண்ணுசாமி அவர்கள், B. A., ]

பள்ளியிற் பயில்வதே கல்வி யென்று இக்காலை கொள்ளப் படுகிறது. ஆனால் உண்மையாகவோ அறியாமையகற்றி யறிவை வளர்க்கும் எவ்வொன்றும் கல்வியே யாகும். பன்றிகட்கும் ஆடுகட்கும் கல்வி பயிற்றுவது என்பது பிரெஞ்சுக்காரர் தம் வழக்காற்றில் காணப்படுவதொன்றாகும். எனவே கல்வியெனப் படுவது பள்ளியிற் கற்பிக்கப்படுவதிலும் நூல்களிற் காணப்படு வதிலுமே அடங்குவதாகாது. என்னை? பயன்றரும் கல்வியாக நூல்களிலிருந்து பெறற்பாலது சாலச் சிறியதாகலின்.

ஏதோ குறிப்பிட்ட சிலப் பல கோடுகளை யிழுக்கவும் புள்ளிகளை வைக்கவுந் தெரியாததனாலேயோ, அன்றிப் பிறர் அவ்வாறு இழுத்தோ வைத்தோ எழுதிய ஒன்று எதைக் குறிக் கின்றது என்று அறிய முடியாததனாலேயோ ஒருவனை அறி விலாதவன் என்று கூறவொண்ணாது, ஏரைப் பிடித்துச் சீரைத் தேடிக் கண் கூடாகப் பெற்ற வொருவன் ஏ, ர், என்னும் இரண்டு எழுத்துக்களைச் சேர்த்தெழுதிய ஒரு சொல் எதைக் குறிக்கின்றது என்று படித்து அறிந்துகொள்ள முடியாதவனா யிருத்தல் கூடும். மகனெனப் பிறந்த ஒவ்வொருவனும் முதற் கண் அறியற்பாலது அவன்றன் வாழ்க்கைத் தொழில் யாதென் பதேயாம். அரசன் முதல் ஆண்டி ஈறாகவுள்ள ஒவ்வொருவ னும் இதை முதலிற் குறிக்கொண்டு அறிந்து வரையறுத்துக் கோடல் வேண்டும். புதியதோர் வீட்டைக் கட்டியானொருவன் அவ்வீடு இடிந்து வீழக் காணுங்கால், வீட்டைக் கட்டிய கொத்தன் தேர்ந்ததோர் வான நூலறிஞன் என்று பிறன் சொல் லக் கேட்டு நெஞ்சடங்குவதும் கருதற்பாலதோ? அது ஒரு நாடு எய்தும் இன்னல்களெல்லாம் அந்நாட்டின் சீரிய சொல்லாளர் களும் வீரப் பணியாளர்களும் இயற்றிய நாட்டுத் தொண்டின் பயன்தான் என்று கருதி யமைதியடைய வேண்டுமென்பதை யன்றோ ஒக்கும்? ஈண்டு நூலறிவு பயன்பட்டவாற்றைக் காண் கிலம்.

இதனானே நூற்கல்வி முற்றும் இகழ்ந்து ஒதுக்கப்படுவ தொன்றென்று கருதல் வேண்டாம். அறிவை வளர்க்க வல்லது நூற்கல்வி யொன்றேதான் என்று கருதல் தவறு என்பதே ஈண்டு எடுத்துக் கூறப்பட்டதாகும்.

வாழ்க்கை நிலையின் பல படிகளிலுமுள்ள ஒவ்வொருவரும் பெரிதும் முயன்று நூற்களைக் கற்றல் நேரிதே. கைத் தொழிற் கும் வாணிகத்திற்கும் நூற்கல்வி இன்றியமையாது வேண்டப்படு வதாகும். நடுத்தரமான வாழ்க்கை நிலையைப் பெற்றவர்களோ கல்வி யறிவற்றிருப்ப தென்பது பெரும் வெட்கக் கேடாகும். இவண் யாவருங் குறிக்கொண்டு காத்து விலக்க வேண்டிய பகுதி யொன்றுண்டு. அஃதென்னெனின் தன்னாற்றலும் கல்வியறி வின் பெருக்கமும் மிகுந்து விட்டமையான் வயிற்றுப் பிழைப்புக் கான வாழ்க்கைத் தொழிலைப் பின்னும் மேற்கொண்டு நடத்தி வருதல் இகழ்ச்சிக்குரியதாகும் என்று கருதி அதை யொதுக்கி விடாமையே யாகும்.

இஃதொன்றைத் தவிர்ந்து மற்றெவ் வழியிலும் நூற்கல்வி பெரிதும் போற்றத் தக்கதும் ஒவ்வொரு தொழிலுக்கும் பெரி தும் இன்றியமையாது வேண்டப்படுவதுமாகும். பிழையறப் படித்தலும், தெளிவாகவும் மணி மணியாகவும் எழுதலும், கணக் குப் போடுதலும் எத்தொழிற்கும் எஞ்ஞான்றும் யாவர்க்கும் உரிய கல்விப் பொருள்களாம். அவற்றிற் படித்தலும் எழுத லும் சிறு மகாரும் எளிதிற் கற்கக் கூடியன. கணக்கோ அத் துணை யெளிதிற் கைவரப்பாலதொன்றன்று; ஆயினும் அது கருதி ஒதுக்கற்பாலது மன்று. கற்கும் மொழியின் இலக் கணத்தை யறிதற்குக் கூடக் கணக்கியலறிவு இன்றியமையாது வேண்டப்படுவதாகும். முறையுறக் கற்பின் கணக்கு விரைவிற் கற்றுக் கொள்ளக் கூடிய தொன்றே. அதைக் கற்கப் பேரறிவு வேண்டியதில்லை. கற்றதனால் அது அறிவைக் கலக்குவதென் பதுமில்லை. நாளும் பயன்படுவது; எனவே யாரும் பரிந்து கற் கற்பாலது அது.

# பண்டைத் தமிழ்ச் சொற்கள்

[திரு. M. V. நெல்லையப்ப பிள்ளையவர்கள் B. A.]

## நக்கன் (கஉ)

பண்டைத் தமிழர்களால் கடவுளைக் குறிக்க வழங்கப்பட்ட தமிழ்ச் சொற்களில் நக்கன் என்ற சொல் ஒன்று. அச் சொல்லில் அடங்கியுள்ள கருத்துக்களை இக் கட்டுரையில் கருதுவாம்.

2. நக்கன் என்ற சொல் நகு என்னும் பகுதி (root) யாலும் அன் என்னும் உயர்திணை ஆண்பாற் படர்க்கை விகுதியாலும் ஆக்கப்பட்டது. நகு அன் என்ற உருபோடு ஒன்று சேரும்பொழுது நகு இரட்டித்து நக்கு என்றாய் அன் என்பதிலுள்ள அகர உயிர் முன் உகரம் கெட்டு நக்கன் என வந்தது. நகு+அன் நக்கன் என இரட்டித்தது; மிகு+அது மிக்கது தொகு+அது தொக்கது என்பது போல்வன.

3. நகு என்னும் அடிச்சொல் முதற் பொருளில் 'விளங்கு' அல்லது ஒளி செய் (shine) என்று பொருள்படும். திருநாவுக்கரசு சுவாமிகளுடைய பழனம் தேவாரப்பதிகம் க-வது பாட்டில் முன்மாலை நகு திங்கள் முகிழ் விளங்கு முடிச் சென்னி என்பதிலும், திருநாவுக்கரசு சுவாமிகளுடைய சிவனெனுமோசை என்ற தேவாரப்பதிகம் எ-வது பாட்டில் நகு வெண்டலையர் என்பதிலும் நகு என்ற சொல் விளங்கு (Shine) என்ற பொருளில் வந்திருத்தல் காண்க. 'நகு' ம் 'ஐம்' சேர்ந்து வந்த நகை என்ற சொல்லானது முல்லைப்பாட்டு எஅ-வது வரியில் "நகைதாழ் கண்ணி" என்பதிலும் திருமுருகாற்றுப்படை, அசு-வது வரியில் "நகை தாழ்பு துயல்வரூஉம் வகையமை பொலங்குழை" என்பதிலும், சிலப்பதிகாரம் புகார் காண்டம் கானல்வரி நஅ-வது வரியில் "வாரித் தரளம நகை செய்து" என்பதிலும் திருநாவுக்கரசு சுவாமிகளுடைய சிவனெனுமோசை என்ற தேவாரப்பதிகம் எ-வது பாட்டு "நகைவளர் கொன்றை" என்பதிலும் விளக்கம் அல்லது ஒளிஎன்ற பொருளில் வந்திருத்

தல் காண்க. ஒளி அல்லது விளக்கம் என்ற பொருளில் நக்கன் என்பது ஒளி செய்வோன் என்று பொருள்படும். ஒளி என்ற கருத்தானது மக்களுக்கு ஞாயிறு திங்கள் தீ என்ற பொருள் களால் பெறப்படுவது. முதன்மையாய் ஞாயிறினாலேயே ஒளி என்ற கருத்துப் பெறப்படுவது, ஞாயிறு தனது ஒளியில் எவ்வாறு உலகிலுள்ள புற இருளை நீக்குகின்றானோ அவ் வாறு கடவுள் தனது அருள் ஒளியாகிய அறிவினால் உயிர்க ளிடத்துள்ள அக இருளை நீக்குகின்றனர். ஆகவே நக்கன் என்ற சொல் உயிர்களுக்கு அருளாகிய அறிவு ஒளியால் மல மாகிய இருளை நீக்குகின்றவன் என்று பொருள்படும். ஒளி என்ற சொல்லே கடவுளைக் குறிக்கும் சொற்களில் ஒன்று. அதைப்பற்றி தனியே ஒரு கட்டுரையில் பின்னாலே விளக்குதல் செய்யப்படும்.

இனி நகு என்னும் அடிச்சொல் மகிழ் என்ற பொருளி லும் வருகின்றது. நகை என்பது மகிழ்ச்சி என்று பொருள் படும் "இருளின்றேற் றுன்பேன்" என்று உமாபதி சிவாச்சாரிய சுவாமிகள் திரு அருட்பயனின் கூறியவாறு உயிர்களுக்குத் துன் பமானது மலத்தினாலுண்டாகும் இருள் அதாவது அறியாமை யாலுண்டாகின்றது. அத்துன்பம் அருளாலுண்டாகும் அறிவி னால் நீங்குகின்றது. துன்பம் நீங்கும்பொழுது உலக இன்பம் உண்டாகி மக்கள் அவ்வின்பத்தினால் மகிழ்ச்சி அடைகின்றார் கள். ஆதலினால் நகை என்ற சொல்லைப் பண்டைத் தமிழர்கள் மகிழ்ச்சி என்ற பொருளில் வழங்கி வந்தார்கள். ஒன்பது சுவை உணர்வுகளில் (நவரசம்) நகையை ஒரு சுவை உணர்வாக தமிழ் முன்னோர்கள் எடுத்திருக்கிறார்கள் (தொல்காப்பியம் மெய்ப்பாட்டியல் உருக-வது சூத்திரம்) இப்படி உள்ளத்தி னுள்ளே உண்டாகின்ற மகிழ்ச்சியானது மெய்யிலே சிரிப்பாக வெளிப்படுகின்றது. அதனால் நகை என்னும் சொல் சிரிப்பு என்னும் பொருளிலும் வருகின்றது. சிரிப்பு சிலவேளை இகழ்ச்சியைக் குறிக்கவும் செய்யப்படுகின்றதாதலின் நகை இகழ்ச்சி என்ற பொருளிலும் வருகின்றது. நகையானது மெல் நகையாகிய புன் சிரிப்பாயிருக்கும்பொழுது உள் மகிழ்ச்சியை

யும் பெருஞ்சிரிப்பாய் ஓசையுடன் வெளிப்படும்பொழுது இகழ்ச்சியையுங் குறிக்கும் என்று நாம் பொதுவாகக் கூறலாம். அருள் ஒளி விளங்கும் அன்புடைப்பெரியார் புன்சிரிப்பே செய்வார்கள். புன்சிரிப்பாயாவது, பெருஞ் சிரிப்பாயாவது நகை உண்டாகும்பொழுது ஒருவருடைய பல் வெளியே தெரிதலால் நகை என்னும் சொல் பல் என்ற பொருளிலும் வழங்கப்படுகின்றது. பண்டைத் தமிழ் நூல்களில் மேலே கூறிய பொருள்களில் நகு நகை என்ற சொற்கள் வழங்கப்படுதலைப் பார்க்க நாம் காணலாம். நகை என்ற சொல் சிறுபாணாற்றுப்படை உஉ௰-வது வரியில் "இன்னகைபாய் மொடு" என்பதிலும் சிலப்பதிகாரம் புகார் காண்டம் கனாத்திற முரைத்த காதை எஉ-வது வரி "நலங்கேழ் முறுவல் நகைமுகங்காட்டி" என்பதிலும் மகிழ்ச்சி என்ற பொருளிலும் திருநாவுக்கரசு சுவாமிகள் தனித்திரு நேரிசைப் பதிகம் கூ-வது பாட்டு "கலந்துதானோக்கி நக்கு வெள்ளரோ மென்று நின்றார்" என்பதில் புன்சிரிப்பு என்ற பொருளினும் வந்திருத்தல் காண்க.

5. இனி நக்கன் என்ற சொல் உடையில்லாதவன் (நிருவாணி) என்ற பொருளிலும் வழங்கப்படுகின்றது. திருஞானசம்பந்த சுவாமிகள் திருவெண்டுறைப் பதிகம் ௰-வது பாட்டு "நக்குருவாய் வருந்து வாரடை நயந்துடையாம்" என்பதில் "நக்குருவாயவர்" என்று சமணரைக் குறித்திருத்தல் காண்க. இந்தப் பொருளில் நக்கன் என்றசொல் சிவபெருமானைக் குறிக்கின்றது. திருஞானசம்பந்த சுவாமிகள் திருப்பழனம் தேவாரப் பதிகம் க-வது பாட்டில் "நாதா வெனவும் நக்கா எனவும் நம்பா என நின்று" என்பதிலும் திருநாகைக் காரோணப் பதிகம் எ-வது பாட்டு "எழில் நக்கரெம்மாற்கிடம்" என்பதிலும் திருநாவுக்கரசு சுவாமிகள் திருச்சிவபுரம் திருத்தாண்டகம் உ-வது பாட்டில் "நக்கன்காண்" என்பதிலும், நக்கன் என்ற சொல்லால் சிவபெருமானைக் குறித்திருத்தல் காண்க. இந்தப் பொருளில் சமணர்கள் நக்கன் என்ற சொல்லைத் தங்கள் கடவுளாகிய அருகனுக்கும் உடையில்லாமல் (நிருவாணியாய்) இருக்கின்ற சமணத் துறவியையும் குறிக்க வழங்கி வந்தார்கள். சமணர்

கள் வடமொழியை நன்கு பயின்றவர்களாதலின் நக்கன் என்ற தமிழ்ச் சொல்லுக்குப் பதிலாக வடமொழியில் 'திகம்பான்' (திசையை ஆடையாக உடையவன்) என்ற சொல்லையும் தங்கள் கடவுளாகிய அருகனுக்கு வழங்கி வந்தார்கள். திகம்பரன் என்ற வடமொழிச் சொல் சிவபெருமானைக் குறிக்க தமிழ் மொழியில் வழங்கப்பட்டு வருகின்றது.

6. இனி ஒளி விளங்குகிறவன் அல்லது ஒளியன் என்று பொருள் படுகின்ற நக்கன் என்ற சொல் உடையில்லாதவன் (நிருவாணி) என்ற பொருளில் வருகின்ற காரணம் கருதுவாம். எத்தகைய வறுமையுடைய மக்களுக்கும் இன்றி அமையாத உடையை ஒருவனில்லாதவனு யிருந்தால் அவன் வெளித்தோற் றத்தில் (வேடத்தில்) யாதொருபற்றும் இல்லாதவன் என்பது பெறப்படுகின்றது. உலகப் பொருள்களில் அவாவும், அது பற்றி அவைகளில் பற்றும் இல்லாதவன் என்ற பொருளை நக்கன் என்ற சொல் உருவகமாய் (metaphorically) குறிக் கின்றது. உலகப் பொருள்களில் பற்று இல்லாதவன் என்பத னோடு இனம்பற்றி உயிர்ப் பொருள்களிலும் பற்றில்லாதவன் என்பதுவும் நக்கன் என்னும் சொல் குறிக்கின்றது. ஆகவே நக்கன் என்பது பொருட் பற்று உயிர்ப் பற்றுக்களாகிய புறப் பற்று அகப்பற்றுக்கள் ஒன்றும் இல்லாதவன் என்ற பொரு ளில் வருகின்றது. இந்த வழக்குப் பற்றி இக்காலத்திலுள்ள சில இந்து சமயத் துறவிகளும் உடை யில்லாதவர்களா யிருக்கி றார்கள். கடவுள் உலகப் பொருளிலாவது உயிர்ப் பொருளி லாவது யாதொரு பற்றுமல்லாதவனுய் அவைகளில் விருப்பும் வெறுப்பும் இல்லாதவன் (வேண்டுதல் வேண்டாமையிலான்) ஆதலின் பண்டைத் தமிழ் மக்கள் தாங்கள் வணங்கி வந்த சிவ பெருமானுக்கு நக்கன் என்ற பெயரை இட்டு வழங்கி வந்தனர். "பற்றலாவதோர்நிலை, யிலாப்பரம் பொருள்" என்று மாணிக்க வாசகசுவாமிகள் திருவாசகத்தில் குறித்திருத்தல் காண்க. அவ் வாறு அவன் விருப்பு வெறுப்புகளில்லாமைக்குக் காரணம் நிறைவு அறிவு (வியாபக அறிவு) உடையனுகவும் நிறைந்தபேரின் பனுகவும் விளங்குதலேயாகும். உயிர்களைப் போல வேறொரு

பொருளினாலும் விளங்காது தானாகவே விளங்குகிற ஒளியினால் விளங்குகிற தன்னொளியனா (சுயஞ்சோதியன்) யிருப்பதினாலே தான் அவன் எப்பொருள்களிலும் பற்றுவையாதவனாயிருக்கின்றான். உயிர்கள் கடவுள் அறிவிக்க அறிகின்றவைகளாயும், கடவுளைச் சார்ந்து உலக இன்பமும் பேரின்பமும் அடைகிற பிற சார்பு உடையவைகளாய் (பாதந்திரர்களாய்) இருக்கின்றன. ஆதலின் ஒளியன் என்ற பொருளில் வந்த நக்கன் என்ற சொல் யாதொரு பற்றும் இல்லாத நிருவாணி என்ற பொருளில் பண்டைத் தமிழர்களால் வழங்கப்பட்டு வந்தது.

---

# ஆய்ச்சியர் குரவை

[திரு. அ. நடராஜ பிள்ளை அவர்கள்.]

நன்னானிலத்துண் முல்லை நிலமானது காடுங் காடு சார்ந்த வூர்களு மென்பதும், அதன் கண் வாழு மக்கள் ஆயர் ஆய்ச்சியரெனப் பெயர் பெறுவரென்பதுஞ் செந்தமிழன்பர்கள் தெரிந்தனவாம். இன்னும், அம்முல்லை மக்களுக்குப் பொதுவர் பொதுவியர்; இடையர், இடைச்சியர் எனவும் பெயர்களுண்டு. இவர்கள் தொழில் ஆவின முதலிய மூவினங்களைப் பாதுகாத்தலும், அவற்றின் பயன் கொண்டு வாழ்தலுமாம். எனவே, 'ஆய்ச்சியர்,' என்பது முல்லை நிலப் பெண்களைக் குறிக்கும் பெயராம். இப்பெயர் இக்காலத்து, காடு சார்ந்த வூர்களையுடைய செட்டி நாட்டில் வாழும் நாட்டுக் கோட்டைச் செட்டிப் பெண்களுக்கு 'ஆச்சி,' என்று வழங்குவதும் ஆராயத் தக்கதாம். இனி 'ஆய்ச்சியர்,' எனுமொழி, 'ஆ,' என்னு முதனிலை கொண்டெழுந்த, 'ஆய்,' என்ற பெயரின் வளர்ச்சியாதல் வேண்டும். 'ஆ', என்னு முதனிலை யெல்லா முதனிலைகட்கு முன்னுண்டாயதென்பது, எழுத்துக்களின் பிறப்பு முறையில் அது முன்னிற்றலானும், விலங்குகளினொலிக் குறிப்பின் போக்கானும் செவ்வனே விளங்கும். பசு முதலிய விலங்குகட்கு, 'ஆ,' அல்லது, 'மா,' எனப் பெயர் வந்தது மேற்கூறியதனை வலியுறுத்

தும். ஆகவே, மக்கண், முதன் முதலில், இயல்பில்வந்த முதனிலையாகிய, 'ஆ,' என்பதனடியாக வந்த, 'ஆய்,' என்பதனையே, 'தாய்,' என்ற பொருளில் வழங்கலானார்கள் என்பது வெளிப்படை. பின்னர், அது அவ்வாயினை யொத்துப் பாற்பயனை யுலகிற்குக் கொடுத்து வாழும் முல்லை நில மக்களுக்கு, 'ஆயர், ஆய்ச்சியர்,' என்று வழங்கலாயிற்றெனக் கொள்ளக் கிடக்கின்றது.

'குரவை,' என்பது, 'குர்,' என்ற வொலிக் குறிப்பினைப் பொருளாய்க் கொண்ட முதனிலையடியாய்ப் பிறந்த பெயர். இது முதலிற் பெண்கள் தம் நாவினையும் இதழ்களையும் குவித் தொலிக்குஞ் செயலொன்றிற்குப் பெயரா யிருந்தது. அப் பெயர் இப்பொழுதும் தென்னாட்டில் 'குலவை,' என வழங்கி வருகின்றது. பின்பு, குரல்களாகிய பாட்டினைப் பாடிப் பலர் கூடியாடுங் கூத்தினுக்குப் பெயராய் மாறியது. ஆகலான், ஆய்ச்சியர் குரவை,' என்பது முல்லை நிறப் பெண்கள் பலர், கூடிப் பாட்டுக்கள் பாடியாடுங் கூத்தாம். இக் கூத்து, பெரும் பாலும் ஆயர்கள், கொல்லேறு தழுவிக்கொண்ட வெற்றியைத் தம் பெண்டிர்களோடு கொண்டாடுங் கொண்டாட்டமாக முற் காலத்தில் வட நாட்டிலும், தமிழ் நாட்டிலுங் கொண்டாடப் பட்டு வந்தது. கொல்லேறு தழுவலாவது, ஆயர்கள் தம் பசு மந்தைகளில், தமக்குப் பெண் குழந்தைகள் பிறந்த காலத்தில் தோன்றிய சேங்கன்றுகளைக் கொழுக்கவளர்த்து தம் பெண் மக்கள் மணப் பருவமுற்றவுடன், நாடெங்கும் பறைசாற்றி, அம் மழ விளங்கன்றுகளைத் தழுவுவார், தம் பெண் மக்களின் மணமக்களாவரென விளம்ப, குறித்த நாளில், இளங்காளையர் பலர், பரண்களில் வீற்றிருக்கும் பெண் மக்கள் காணும்படி, தொழுவில் நிறுத்தியுள்ள மழவிடைகளைத் தழுவியடக்க முயல்வதாம். இக் கொல்லேறு தழுவுதலை, அக்காலத்தில் வடநாட்டில் கண்ண பிரான் ஏழு மழ விடைகளைத் தழுவிப் பின்னைப் பிராட்டி முதலிய வேழு கன்னியரை மணந்த செய்தியும், கலித்தொகை முதலிய பண்டைத் தமிழ் நூல்களும் நன்கு விளக்கும். இக்காலத்திலும் தென்னாட்டில் மதுரையைச் சார்ந்த பல விடங்களில், இக்

கொல்லேறு தழுவுதலை, 'மஞ்சிகட்டு,' என வழங்கி யாண்டுக டோறும் தை மாசி பங்குனித் திங்கள்களிற் கொண்டாடுவதும், கொல்லேறு தழுவி வெற்றி கொண்டார்க்கு, அவர் தம் மனைவி யர் வீட்டாரின் போற்றுதல் புகழ்தலேற்படுதலுங் காணப் படுகின்றன.

மேலும், இவ்வாய்ச்சியர் குரவை, கொல் லேறு தழுவிய பின்னன்றிச் சிறு பான்மையாக, ஆய்ச்சியர் தம் கன்று காலி கட்கு நேர்ந்த நோய் நொடிகள் விலகும் பொருட்டுக் கொண்டாடு வது முண்டு. அங்ஙனங் கொண்டாடிய கொண்டாட்ட மொன்று, ஐம் பெருங்காப்பியங்களுளொன்றாகிய சிலப்பதி காரம் மதுரைக் காண்டத்தில் தென் படுகின்றது. அதனை யிங்கு முடிந்த வளவில், ஆய்வதே இக்கட்டுரையின் முதற் கருத் தாம்.

கவுந்தியடிகளால் மதுரையில் மாதரிபால் அடைக்கலம் புகுந்த கண்ணகியுங் கோவலனும் மாதரி வீட்டில் அன்றிரவு தங்கி மறுநாட் காலை யுணவாக்கி யுண்டு மகிழ்ந்தனர். பிற் பகலிற் கோவலன் சிலம்பினை விற்கச் சென்று கொல்லன் பொய்க் கரியாற் கொலை யுண்டனன். கண்ணகி யதனை யறியாதவளாய்க் காதலன் வருகையை யெதிர்பார்த்துக் கலங்கியவளாய் மாதரி வீட்டில் அன்றிரவைக் கழித்தாள். புலரிக் காலத்தே புகுந்த கோயின் முரசொலி கேட்ட மாதரி துயிலொழிந் தெழுந்து, அரண்மனைக்கு நெய்யளக்க வேண்டிய முறையை நினைந்து தனது மகளாகிய ஐயையோடு தயிர் கடைய வேண்டித் தயிர்த் தாழி யிருக்குமிடஞ் சார்ந்தாள். அங்கு, முதனாள், பிரை யிட்ட பால் தோயாது அப்படியே இருந்தது. பக்கத்திலுள்ள தொழுவத்திற் கட்டப்பட்டுள்ள. திரண்ட திமிலை யுடைய காளைகள் கண்ணீரைச் சோர விட்டுக் கொண்டிருந்தன. அவற் றைக் கண்ட மாதரி பெரிதுந் திடுக்கிட்டாள். திடுக்கிட்டும் நெய்ம்முறை நினைவி லெழுந்தமையால், அவள் முன்னாட் கடைந்தெடுத்த வெண்ணெயை யெடுத்து அடுப்பில் வைத்து உருக வைத்தாள். அதுவும் உருகவில்லை. அதனால் அவள் மிகவும் நெஞ்சங் கலங்கி வெளியே வர, முன்றிலில் நின்ற

ஆட்டு மறிகள் துள்ளி யாடாமற் குழைந்து கிடந்தன. கொட்டிலிலுள்ள பசுக்கள் மெய் நடுக்கங் கொண்டு அரற்றின. அவற்றின் கழுத்திற் கட்டப்பட்ட பெரிய மணிகள் பலவு மறுந்து வீழ்ந்தன.

இவற்றை யெல்லாங் கண்ட மாதரியும், ஐயையும் தங்கட்கு வரக் கடவ தோர் துன்ப முண்டென மயங்கினர். பின்பு, மாதரி தெளிந்து தன் மகளை நோக்கி, "குழந்தாய்! மயங்காதே! அம் மதுரையைச் சார்ந்த ஆயர் பாடியில், ஒரு மன்றத்திற் கண்ண பிரான் தன் முன்னவனுகிய பலராமனெடு விளையாடிய நாடகங்கள் பலவுள. அவற்றுள், வேனெடுங்கண் பிஞ்ஞையோ டாடிய குரவைக் கூத்தினை, இக்கறவை கன்றுகளின் பிணி நீங்கும்படி யாட்டுவிப்போம்," என்ருள் ஐயை அதனை யேற்றுக் கொண்டு பக்க மனைகளிலுள்ள விடைக்குலக் கன்னிய ரெழுவரினை யிட்டு வந்தாள். மாதரி அவ்வெழுவரையும், "இக்காரி யெருத்தினது சீற்றத்தைப் பொருட் படுத்தாது சென்று பாய்ந்து தழுவுவானை யிவ்வேரி மலர்க் கோதையாள் விரும்பும்," எனவும், "இந் நெற்றிச் சுட்டியைக் கொண்ட வெற்றி யேற்றின் வலி தொலைத்தானுக் குரியன இப் பொற்ருெடி மாதராள் தோள்கள்," எனவும், இக் கொழுத்த விளங்காளையைத் தழுவி யேறிச் செலுத்தினுற்கே அப்பொற் கொடி மணமாலை சூட்டுவள்," எனவும், "இம் மரை யெருத்தின் மிடுக்கினைக் கெடுத்தவனையே அப் பூங்கொடி பொருந்துவள்," எனவும், "இக் கொன்றையம் பூங்குழலாள் அவ்வெள்றி மழவிடை யூர்ந்தார்க் குரியள்," எனவும், "இப் பூவைப் புது மலராள் அந்தப் பால் வெள்ளை யேற்றைப் படிவித்தாற்கே பாங்கியாவள்," எனவும், "இம் மயிலை யேற்றை மடக்கியதன் வலி தொலைத்தானையே யிப் பெண் கொடி பெரிதும் விரும்பும்," எனவும் புகழ்ந்து அவர்களோடு தன் வீட்டு முற்றத்திற்கு வந்து சேர்ந்தாள். தூக்கமின்றித் துயரங் கொண்டிருந்த கண்ணகியும் அவ்வரவங் கேட்டு அங்கு வந்து சேர்ந்தாள். மாதரி அவளைத் தழுவிப் போற்றி யங்கு நிகழ்ந்த கெடு குறிகளை யெடுத்துக் கூறியதற்குக் கழுவாயாகச் செய்யும் குரவைக் கூத்தினையுங் குறிப்பிட்டாள். கண்

ணகியும் அவர்கள் செயலை யொருபாலமர்ந்து காணத் தொடங்கினாள். மாதரி முற்றத்தில், 'வட்ட பாலை,' என்னும் குரவை யாடுகளனைப் பின் வருமாறு வகுத்து முடித்தாள் :—




வட்டப்பாலை மண்டலமாவது, சாணுக்குச் சாண (இரு சாண்குறுக்களவா)க வொருவட்டங் கீறி, அவ்வட்டத்தின் பெருந்திசைகள் நான்கன்மீதும் இவ்விரண்டு கோடுகளோட்டி, கோணத்திசைகள் நான்கின்மேலும் ஒவ்வொரு கோட்டினைப் போக்கியக் கோடுகளின் மேற்பாகங்களைச் சேர்த்து மண்டலஞ் செய்து பன்னிரண்டு வீடுகள் அமைப்பதாம். அப்பன்னிரண்டனுள், பன்னீரிராசிகளிலும் மேடமுதற் கன்னி வரையுள்ள ஆறு இராசிகளையும் வலது புறமிருந்து இடது புறம் வரையுள்ள ஆறு வீடுகளிலும், துலா முதல் மீனம் வரையுள்ள ஆறு இராசிகளையும் இடது புறமிருந்து வலது புறம் வரையுள்ள ஆறு வீடுகளிலும் அமைத்தல் வேண்டும். இங்ஙனமமைந்த பன்னிரண்டு இராசிகளுள், இடபம், கற்கடகம், சிங்கம், துலாம், தனுசு, கும்பம், மீனம் என்னு மேழு இராசிகள் மட்டும் யாழ் நரம்புகள் ஏழுடன் இயங்குவனவாம். அங்ஙனமவைகள் இயங்குமிடத்து, குரல் நரம்புடன் துலாமும், துத்த நரம்புடன் தனுசும், கைக்கிளை நரம்புடன் கும்பமும், உழை நரம்புடன் மீனமும், இளி நரம்புடன் இடபமும், விளரி நரம்புடன் கற்கடகமும், தார நரம்புடன் சிங்கமுஞ் சாரும்.

(தொடரும்)

# அம்பலவாணர் திருக்கூத்து*

"எப்பொருட்கும் எவ்வுயிர்க்கும் உள்ளகத்தும் புறத்தும்
இயல்உண்மை அறிவுஇன்ப வடிவாகி நடிக்கும்
மெய்ப்பொருளாம் சிவமொன்றே என்றறிந்தேன் உனக்கும்
விளம்புகின்றேன் மடவாய்நீ கிளம்புகின்றாய் மீட்டும்
இப்பொருள் அப்பொருளென்றே இசைப்பதென்னே பொதுவில்
இறைவர்செயும் நிரதிசய இன்பநடந் தனைநீ
பைப்பறவே காணுதியே அத்தருணத் தெல்லாம்
பட்டநடுப் பகல்போல வெட்ட வெளி யாமே"

என்று இராமலிங்க அடிகள் அருளிச் செய்த திருவருட் பாவைக் கருவியாகக் கொண்டு அம்பலவாணர் உண்மை விளக்கப்பட்டது. உலகத்திலுள்ள பொருள்களெல்லாம் அறிவு இல்லாதன அறிவு உள்ளன என இரு வகையில் அடங்கும். அறிவில்லாதன மண் முதலாக ஐவகைப்படும். இற்றைய மேல்நாட்டு ஆராய்ச்சியில் அறிவில்லாத பொருள்கள் எழுபத்தைந்துக்கு மேல் எழுபத் தொன்பது வகையாக வகுத்துக் காட்டப்படுமாயினும், பருப் பொருளாகப் பார்க்குங்கால் அவை ஐந்திலேயே அடங்குகின்றன. டாக்டர் பாஸ்டியன் (Dr. Bastian) என்னும் மேற்புல ஆசிரியர் அறிவில்லாப் பொருள்களிலிருந்தே அறிவுடைய பொருள்கள் தோன்றுகின்றன என்று காட்டினர். ஆசிரியர் டிண்டால் (Prof. Tyndall) என்னும் ஆசிரியர் பின்னால் நன்காராய்ந்து அறிவிலாப் பொருள்களிலிருந்து அறிவுடைய பொருள்கள் தோன்றா. அறிவிலாப் பொருள்கள் வேறு அறிவுடைய பொருள்கள்வேறு என்று முடிபுகட்டி மொழிந்து மேல் ஆசிரியர் கருத்தை மறுத்து நிறுவினர். இவ்விரு பெரும் பகுப்பைத்தான் இராமலிங்க அடிகள் "எப் பொருட்கும் எவ்வுயிர்க்கும்" என்று வகுத்து விளக்கினர்.

இனி, இவ்விரண்டு பொருள்களின் வேறாக இவற்றையெல்லாம் இயக்கவல்ல பேரறிவுப் பொருள் வேறொன்று உள்ளது.

---

* பல்லாவரம் பொதுநிலைக் கழக விழாப் பேரவையில், மறைத் திருவாளர் மறைமலையடிகள் நிகழ்த்திய சொற்பொழிவின் சாரம்.

அது எங்கே உள்ளது என்றால் மேலே காட்டிய அறிவிலாப் பொருள், அறிவுள்ள பொருள் என்னும் இருவகைப் பொருள் களின் உள்ளேயும் இருக்கின்றது வெளியேயும் இருக்கின்றது என்று கூறுதல் வேண்டும். இதனையே 'ஈசா வாசியோபநிடதம்' நன்கு வலியுறுத்துவதாயிற்று. மேற் பாட்டில் இராமலிங்க அடிகள் "உள்ளகத்தும் புறத்தும்" என்று விளக்கி யருளினர்.

## இறைவன் உண்மைப் பொருள்

இனி, அத்தகைய பேரறிவுப் பொருள் எப்படிப் பட்டது என்பதையும் நாம் அறிய விழைகுவோம் அல்லவோ? முதலில் அப் பொருள் உண்மையானது என்பதை நாம் தெரிந்து கொள்ள வேண்டும். நம் கண்ணெதிரே காணப்படுகின்ற அறி வில்லாப் பொருள்கள் உண்மையானவையா என்று பார்த்தால், அவை உண்மை யல்லாதவை என்றே நமக்குப் புலனாகும். எத்தனையோ பெரும் பட்டினங்களெல்லாம் நில அதிர்ச்சியினால் மாறி உண்மை யில்லாதனவாய் நிலை குலைந்தன. எத்தனையோ நில உருண்டைகள் நில்லாமல் அழிந்துபோயின. நாம் வாழும் இந் நில உருண்டையும் இன்னும் சில ஆயிர ஆண்டுகளிற் குளி ரால் இறுக இறுக இல்லையாய்ப் போகும் என்று ஆராய்ச்சியா ளர் ஆராய்ந்து கூறுகின்றனர். ஆகையால் அறிவில்லாப் பொருள்கள் உண்மையானவை யல்ல. இனி அறிவுள்ள உயிர் களாவது உண்மையானவையோ என்றால் அவையும் அங்ஙன மில்லை என்க. நினைவு ஒன்று, சொல் ஒன்று, செயல் ஒன்று என்னும்படி நம்மிற் பலர் உண்மை யில்லாதவர்களாய்க் காணப் படுகின்றனர். நமக்கு மனமொத்த நண்பர் ஒருவரைக் காண் பது அரிது. சாக்ரட்டீஸ் (Socrates) என்னும் பெரியார் தமது வீட்டில் தாம் வழக்கமாய் அமரும் இருக்கைக்குப் பக் கத்தில் ஒரு வெற்று நாற்காலி இட்டு வைத்திருந்தனர். அவர் பால் வழக்கமாய்ப் போகும் நண்பரொருவர் என்றும் அது வெற்று நாற்காலியாகவே இருக்கக் கண்டார். கண்டு அவரை என்னென்று கேட்க அவர் எமக்கு மனமொத்த நண்பரை இங்கு அமர்விக்கும் பொருட்டு இந் நாற்காலியை இட்டு வைத் தேன். வைத்து இத்தனை நாளாகியும் அங்ஙன மொரு நண்பர்

காணப்படாமையால் இது வெறுமனுகவே இருக்கின்றது என்று கூறினராம். அன்பர்களே! அறிவுள்ள உயிர்ப் பொருள்களுங்கூட எவ்வளவு உண்மை யில்லாதனவா யிருக்கின்றன பாருங்கள்! ஆகையால் இவற்றின் வேருன பேரறிவுக் கடவுள் ஒருவரே உண்மையானவர் என்பதை உணர்மின்கள்!

## கடவுள் பேரறிவுப் பொருள்

இனிக் கடவுள் பேரறிவுப் பொருள் என்பதை ஆராய்வோம். இதன்கண் அறிவில்லாப் பொருள்களைப் பற்றிப் பேச வேண்டியதில்லை. இனி அறிவுள்ள உயிர்களுக்கோ எந்நேரமும் அறிவு விளங்குவதில்லை. நூறுண்டு உயிர்வாழும் ஒருவனுக்கு அரைவாசி தூக்கத்தில் ஒழியப் பதினுருண்டுகள் இளமையிலொழியப் பொருள் முயற்சி பசி நோய் முதலான பல வகைகளில் மிஞ்சிய ஆண்டுகளும் கழிந்துபோக எஞ்சிய நாலைந்து ஆண்டுகளே அறிவு நிகழும் நேரமாயிருக்கின்றன. இது நூருண்டு உயிர்வாழ்வானுக்கு உரியதாகும். ஆனல் ருஷியர்கள் அறுபத்தாருண்டும், அமெரிக்கர்கள் ஐம்பத்தைந் தாண்டும், ஆங்கிலேயர்கள் முப்பத்து நான்கு ஆண்டும் சராசரியில் உயிர் வாழ, ஐயகோ, நம் இந்திய நன்மக்கள் இருபத்திரண்டு இருபத்தி நான்கு ஆண்டுகளே உயிர் வாழ்கின்றனர். இந்த மிகச் சிறிய வாழ்க்கையில் நம்மவர்க்கு அறிவு நிகழும் நேரம் ஏறக்குறைய ஓராண்டுதான் ஆகும். நம்மறிவு எவ்வளவு சிறியதாயிருக்கின்றது பாருங்கள்! நமக்குள்ள இச்சிறுமையை நியூட்டன் என்னும் அறிஞர் ‘நான் இப்போது அறிவாகிய கடலின் கரையில் நின்று அங்குள்ள கூழாங் கற்களைப் பொறுக்கிக் கொண்டிருக்கும் நிலையிலிருக்கின்றேன்’ என்று மிக அழகாக ஒரு நூலில் எடுத்துக் காட்டினுர். இந்நிலையிலுள்ள நாம் எப்போது அவ்வறிவுக் கடலைக் கடப்பது? ஆனல் ஆண்டவன் என்றும் முழுப் பேரறிவாகவே விளங்குகின்ருன். அவன் நமக்குச் செய்தளித்த இவ்வெண்ணில்லாத உலகங்களையும் அவற்றின் எண்ணில்லாப் பொருள்களையும் இவ் எண்ணில்லா உடம்புகளையும் இவற்றின் எண்ணற்கரிய உறுப்புக்களையும் செய்தமைப்பதற்கு எவ்வளவு உயர்ந்த அறிவு வேண்டும். குண்டிக்காய் பழுதுபட்ட ஒரு

வற்கு மருத்துவர் ஒருவர் அதனை வெள்ளியினாற் செய்தமைத்து உயிர் பிழைக்கச் செய்தார். ஆயினும் அந்நோயாளி நீண்டநாள் உயிர் வாழ்வது அரிது. அம்மருத்துவர் அறிவை என்னிடம் ஒருவர் வியந்து பேசியபொழுது யாமும் அது கண்டு வியந்தேம். ஆனால் எமக்கு அப்போது ஒன்று தோன்றியது. பழுதுபட்ட குண்டிக்காயை வெள்ளியினாலமைத்து உயிர் பிழைப்பித்த மருத்துவற்கு அதனை முன்னுள்ளதுபோற் சதையினாலேயே செய்தமைக்க இயலவில்லை யல்லவா? அதனை அங்ஙனம் சதையினாற் செய்தமைத்த இறைவனுடைய அறிவு எவ்வளவு உயர்ந்ததாயிருக்கவேண்டும்! அதனை நாம் எவ்வளவு வியந்து பேசவேண்டும் என்று எண்ணினேம்! ஆதலால் எல்லாம் வல்ல முழுமுதலிறைவனே பேரறிவுப் பொருளாவன் என்பது தெரியப்படும். இன்னும் பாருங்கள்! உயிர்களாகிய நமக்குள்ள இச் சிற்றறிவு தானும் தெளிவாய் உள்ளதோ வென்றால் இல்லையே அன்பர்களே! இதனை நம் மெய்கண்ட தேவ நாயனார் “மயக்க மதுற்றும் மருந்திற் றெளிந்தும்” என்னும் அருளுரையினால் தெளிவித் தருளினர். இங்ஙனம் உயிர்களின் அறிவு, அறிவு நிலையிலும் சேர்க்கப்படாமல் அறியாமை நிலையிலும் சேர்க்கப்படாமல் அவற்றிற்கு இடைப்பட்டதா யிருத்தலினாலேதான் அதனைச் சைவ சித்தாந்த நூல்களிற் ‘சத சத்து’ என்று கூறியிருக்கின்றனர்.

## இறைவன் இன்பப் பொருள்

இனி இறைவன் இன்பப் பொருளாவன் என்பதும் அறிதல் வேண்டும். சிற்றுயிர்கட்கு இன்பமாய்த் தோன்றுவன எல்லாம் முன்னால் இன்பமாய்த் தோன்றிப் பின்னால் துன்பத்தையே விளைப்பனவா யிருக்கின்றன. இறைவனது இன்பம் என்றும் ஒரு படித்தாகவே எப்போதுமிருக்கும். இதனை மணிவாசகப் பெருமான்,

“தினைத்தனை யுள்ளதோர் பூவினிற்றே னுண்ணாதே
நினைத்தொறுங் காண்டொறும் பேசுந்தொறும் எப்போதும்
அனைத்தெலும் புண்ணெக ஆனந்தத் தேன் சொரியுங்
குனிப்புடை யானுக்கே சென்றூதாய் கோத்தும்பி”

என்னும் திருவாசகத்தால் இனிது விளக்கினர்.

இனி இவ் இயல்பினனான கடவுள் என்றும் அம்மையப்ப ராய் விளங்குகின்றார். பண்டைக் காலத்திற் கடவுளை அம்மை யப்பராகவே எல்லாரும் வழிபட்டனர். அம்மை வணக்கம் பிற்காலத்தில் திருமால் வணக்கமாக மாறியது. பழைய தமிழ் நூலான பரிபாடலில் திருமாலுக்குப் பத்து அவதாரங்கள் கூறப்படவில்லை. பின் வந்தோர் கூறினர். திருமால் வேறு சிவம் வேறு என்றனர். பின் மும்மூர்த்திகள் என்று மூவர் கொண் டனர். அன்பர்களே, படைத்தல் தெரிந்த கடவுளுக்குக் காத் தலும் அழித்தலும் தெரியாதா ? இயலாதா ? ஆகவே முழு முதல் ஒருவனே முத்தொழில்களையும் புரிகின்றனன் என்ப துவே உண்மையாகும். ஆகவே, அம்மையப்பராய் பண்டைக் காலத்தில் வழிபட்ட முழுமுதல் ஒரு கடவுள் வணக்கமே சாலச் சிறந்ததாகும். இவ்வுண்மைகளையே இராமலிங்க வள்ள லார் மேற் பாட்டில்,

"இயல்உண்மை அறிவு இன்ப வடிவாகி நடிக்கும்
மெய்ப்பொருளாம் சிவமொன்றே என்றறிந்தேன்"

என்று விளக்கிக் காட்டினர். இத்தகைய முழுமுதற் கடவுள் எங்கும் பொருந்தி எல்லாவற்றையும் இயக்குதலால் அவர் அம் பலவாணர் (நடராசர்) எனப்படுவர். இனி அம்பலவாணரைக் காணவுங் கருதவும் நம்உள்ளம் விழையுமன்றோ? எதனாற் காண லாம். ஞானயோகம் ஒன்றால் மட்டுமே காணலாம். உலகமா னது அண்டம் எனப்படும். அதன்கண் உலவும் இவ்வுடல் பிண்டம் எனப்படும். அண்டத்திற்கும் பிண்டத்திற்கும் ஒற் றுமையுண்டு. அண்டத்தில் விளங்கி அம்பலவாணர் திரு நடம் புரிதல் போலவே பிண்டத்திலும் நடம் புரிகின்றனர். அதனை மூச்சு ஓட்டத்தால் தெரிந்துகொள்ளலாம். மூச்சு ஓட் டமே நம் உயிர் வாழ்விற்குக் காரணமாகும். அதனை மிகுதி யாகச் செலவிட்டால் ஆயுள் குறையும். மூச்சு இயங்கும் திட் டத்தைக் கண்டே மேற்புல அறிஞர்கள் இவர் இவ்வளவு காலம் உயிர் வாழ்வார் என்று ஆயுளை உறுதி செய்கின்றனர். இதன் விரிவு திருமந்திரத்தில் மிக அழகாகச் சொல்லப்பட்டிருக்கின்

றது. நம்முடைய உயிர் மூச்சு இயங்கும் நாடியிலேயே நிலைத்திருக்கின்றது. முன்னெல்லாம் உயிர் மூளையைப் பற்றி நிற்கின்றது என்று ஆராய்ந்து கண்டனர். ஆனால் இப்பொழுது அதனை நன்காராய்ந்து மூளையை எடுத்துவிட்டாலும் உடம்பில் உயிர் நிலைத்திருப்பது கண்டு உயிரின் இருப்பிடம் சுழுமுனை நாடியேயாகும் என்று தெளிந்திருக்கின்றனர். இந்நாடியை (Spinal Chord) என்று கூறுவர். இவ்வுண்மைகளை யெல்லாம் ஞானசிரியர்வழி உணர்ந்து யோகம் பயின்று அன்பர்கள் கடவுளின் றிருவருளைப் பெறுவார்களாக.

---

# நையாண்டி

(கபசம் எழுதியது.)

'யதார்த்தவாதி லோகவிரோதி' என்பது ஒரு கிழமொழி; அதாவது கிழவர்கள் சொல்லுகின்ற மொழி. இதையே பழமொழி என்றுஞ் சொல்லுவார்கள். பழமொழி என்றால் பழுத்த மொழி என்றாவது பழைய காலத்து மொழி என்றாவது பொருள் செய்து கொள்ளலாம். பழைய காலம் என்று சொல்லும்போது நெடுநாட்களுக்கு முந்திய காலம் என்று நினைக்க வேண்டியதில்லை. ஒருநாள் ஆக்கிய சோற்றைத் தண்ணீரில் போட்டு மறுநாள் உண்ணும்போது அது, 'பழையது' ஆகிவிடுகிறது. ஆகையால், "நான் பழையது சாப்பிட்டேன்" என்று சொல்லும் வழக்கம் நிறுத்திவிட்டுப் பெரும்பாலோர் புதியது சாப்பிட ஆரம்பித்து விட்டார்கள். இது நிற்க,

"யதார்த்தவாதி லோகவிரோதி" என்று சொல்லிக்கொண்டு நான் ஒரு தெருவழியே போய்க்கொண்டிருந்தேன். அங்கே சுமார் நாற்பது வயதுடைய ஒரு அம்மாள் வீட்டு வாசலில் நின்று கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு முன்னம்பல் இரண்டு மிக நீண்டு, சிவந்த கீழ் உதட்டில் பதிந்து இருந்தன. பல் வெள்ளையாகவும், உதடு சிவப்பாகவு மிருந்ததைப் பார்த்து

வுடன் எனக்கு ஒரு எண்ணம் உண்டானது. செவ்வாய்க்கும் வெள்ளிக்கும் இடையில் புதனும் வியாழனும் வரவேண்டியிருக்க அது தவறிச் செவ்வாயும் வெள்ளியும் இந்த அம்மாளுடைய முகத்தில் ஒன்றாகக் கூடியிருக்கிற விந்தையைச் சொன்னால் ஒருவரும் நம்பமாட்டார்கள் என்று என் மனத்தில் எண்ணம் உண்டாயிற்று. நான் ஒரு புலவனாயிருந்தால் இதைப்பற்றி இனிய கவி ஒன்று பாடி, அதைச் செல்வமுடையவர்களிடத்தில் சொல்லிக் கொஞ்சம் பொருள் சம்பாதித்துக் கொள்வேன். கவிபாடுந்திறமை எனக்கில்லாததை நினைத்து நினைத்து மிக வருந்தினேன். அப்போது எனக்கு அழுகை வந்து விட்டது. சீ, நாம் அழக்கூடாது என்று மனத்தைத் தேற்றிக்கொண்டு, "யதார்த்தவாதி லோக விரோதி" என்று உரத்த குரலில் கத்தினேன். இஃது அந்த அம்மாளுடைய செவியில்பட அவர்கள்: "யதார்த்தத்தைப் பேசுவதால் ஒருவர் ஏன் லோக விரோதியாக வேண்டும்? இதெல்லாம் வெறும் பேச்சு" என்று சொன்னார்கள். அப்பொழுது நான் அவர்களைப் பார்த்து, "அம்மா உங்கள் பல்லைப் பழனியாண்டிக்கு விட்டிருக்கிறீர்களா? அல்லது ஏழுமலையானுக்கு விட்டிருக்கிறீர்களா?" என்று வினவினேன். அப்போது அந்த அம்மாளுடைய முகஞ் சுருங்கி, பல் முன்னினும் அதிகமாய் நீண்டது. "நீ என்ன சொல்கிறாய்?" என்று அவர்கள் சினந்து சீறிவிழுந்து கேட்டார்கள். நான் மிகுந்த சாந்தத்துடன், "இல்லை, பழனிக்கு அல்லது திருப்பதிக்கு வளர்த்த மயிரைப்போல் உங்கள் பல் வளர்ந்திருக்கிறதே, அது ஏன்" என்றேன். உடனே அந்த அம்மை, என்னைக் கட்டையில் வைப்பதைப்பற்றியும், பாடையில் கொண்டு போவதைப் பற்றியும் பல வகையில் பாடத் தொடங்கினார்கள். "யதார்த்த வாதி லோகவிரோதி" என்பது சரியாய்ப் போயிற்று என்று நான் வெகு அமைதியுடன் சொன்னேன். ஆனால் அந்த அம்மையாருடைய பாட்டு முன்னிலும்பன்மடங்கு அதிகமாயிற்று. இந்த வேளையில் என்ன செய்வதென்று தெரியாமல் நான் மயங்கி நிற்கையில், எனக்கு எதிரே வீதியில் வந்த ஒருவர், "இந்த அம்மாள் ஏன் உன்னை இப்படி

திட்டுகிறார்கள்?" என்று விசாரித்தார். பல் நீண்டிருக்கிறது என்று நான் சொன்னேன். அதன் பேரில் அவர்கள் ஒரு பல்லவி பாடுகிறார்கள், வேறொன்று மில்லை" என்று சமாதானமாய்ப் பதிலுரைத்தேன். இதைக் கேட்டு விட்டு வந்தவர் தம் வழியே போகாமல் "இந்த அம்மாள் யார்?" என்று கேள்வி போட்டார். "இவர்கள் யாரோ தெரியாது; ஆனால் அவர்கள் பெயர் மாத்திரம் எனக்குத் தெரியும்" என்றேன்.

"இவர்களுடைய பெயர் என்ன?"

நான்:—"கௌளி அம்மாள்"

"கௌரி அம்மாளா?"

நான் "இல்லை கௌளி அம்மாள் தான்"

"கௌளி அம்மாள் என்று கூடவா பெயர் இருக்கும்?

நான் "ஏன் இருக்கக் கூடாது? அதில் என்ன பிசகு?"

"இல்லை, சாதாரணமாய் அப்படி பெயர் இருப்பதில்லை"

நான் "கௌளி என்றால் என்ன?

"கௌளி என்றால் பல்லி"

"நான் இந்த அம்மாளுடைய பல்லைப் பார்த்த பின் இவர் பல்லியம்மாள் என்று சொல்லாமல் வேறு என்ன சொல்வது?"

மேலே கூறியதில் கடைசி வார்த்தை என் வாயை விட்டு வெளியே வருமுன் வாசலில் நின்று வசைபாடிய அம்மணி திடு, திடு வென்று வீட்டிற்குள் ஓடினார்கள். ஓகோ நம்மை வாழ்த்தியது போதாதென்று ஏதோ வெகுமானங் கொடுப்பதற்காக அம்மையார் வீட்டிற்குள் போகிறார்களென்று நான் அறிந்து கொண்டு மின்னல் மின்னி மறைவதுபோல் அவ்விடத்திலிருந்து மறைந்தேன்.

"ஐயோ திருவுளமே என் பல் ஒரு முழமே"

—தமிழ் நாடு.

# அன்பின் அகநிலை அல்லது தர்ம சிந்தை

(A free translation of St. Paul on charity.*)

[மனோன்மணீய நாடக ஆசிரியர் P. சுந்தரம் பிள்ளையவர்கள்]

கலித்துறை.

1. பிறங்கும் பிறர்குறை பேணாது நற்குணம் பேணலுறும்
அறந்திகழ் நெஞ்சி னரன்றே லவர்விண் ணமர்தினையும்
மறந்திடும் வண்ணம் வடித்துப் படிக்கின்ற வார்த்தையெல்லாம்
வெறுங்கல கல்லெனும் வெங்கல வோசையின் வேறலவே.

எழுசீர் ஆசிரிய விருத்தம்.

2. வருபொரு ளுரைக்கும் வல்லபம் பெறிலென்
மண்ணிடை விண்ணிடை மறைந்த
பெருரக சியங்கள் யாவையு முணரும்
பெருமையும் ஞானமும் பெறிலென்
பருவத மெடுத்துப் பந்தென வாடும்
பத்தியுஞ் சித்தியும் பெறிலென் !
பரவனு கூல திருட்டி[1]யென் றுரைக்கும்
பண்புறு மன்பிலை யெனிலே.

3. இல்லவர் யாரு முண்டிடத் தன்கை
யிரும்பொரு ளனைத்தையு மீய்ந்தென்!
நல்லமெய் தனையுந் ததீசி [2]போற்
பிறர்பா னலிவற நல்கியு மென்னை !
அல்லவர் தமையு நல்லவ ரெனவே
யனுதின மதித்துகந் திடுமோர்
சொல்லரு முண்மை யன்புமற் றிலையேற்
சுகமிலை யென்பது துணிபே.

---

* The first Epistle to Corinthians, Chapter XIII. Stanzas 1—8 Correspond to verses 1—8; Stanza 9 to verses 9, 10 and 11 to verses 12 and 13. Stanza 12 concludes with a prayer.

1. பரவனுகூலதிருட்டி=பிறருடைய நற்குணமே சாணும் காட்சி.
2. ததீசி=இந்திரனுக்கு வச்சிராயுதம் புதுக்க முதுகெலும்பு கொடுத்த முனிவர்.

4. பிறர்க்கெலா மின்பம் பெருக்குவ தன்பே
பிறர்செயுந் தீங்கனைத் தினையும்
பொறுத்துமேன் மேலு மகழ்வது மன்பே
போற்றிய பிறர்வயி னுற்ற
சிறப்பது கண்டு மழுக்கற [1] விடுத்துச்
சித்தத்துள் களிப்பது மன்பே
அறச்சிறி தேனுந் தன்பெருந் தன்மை
அறிந்துமேம் படாதது மன்பே.

5. அன்னியர் குணத்தை [2] யாய்ந்திடு மன்பி
னழகினைப் பின்னருங் கேண்மோ
தன்னிய னடக்கை தக்கவா றன்றித்
தவறுறாத் தன்மையாய்த் தனது
மன்னிய வுரிமைப் பொருளுக்கா மறந்தும்
வழக்கிட வறிகில தாகி
என்னன செயினு மிழிவுறு கோப
மில்லதாய்க் கெடுநினை விலதாய்.

கலிவிருத்தம்.

6. கொடுமை யென் றெவர் கூறினுங் கேட்டுளம்
நடுந டுங்கிடு நற்குணஞ் சேர்ந்ததாய்க்
கெடல றும்புகழ் மெய்மை கிளத்தல்கேட்
டுடல மெங்கும் புளகித் துவப்பதாய்.

7. வந்த வெல்லாம் பொறுத்து மகிழ்வதாய்
நந்தல் [3] செய்யினும் நம்புத லுள்ளதாய்
எந்த வேளையு மேல்வரு மின்பமே
சிந்தை செய்வதாய்த் தீங்கு சகிப்பதாய்.

அறுசீர் ஆசிரிய விருத்தம்.

8. இப்படி யாவரானு மெய்துதற் குரித்தா நின்ற
செப்பிய பரானு கூல தெரிசன சித்த மொன்றே
மெய்ப்பட நிற்கு மல்லான் மேல்விளை வுணர்வு [4] மோர்கால்
பொய்ப்படும், நாவு மோயும், புலமையும் போகுந் தானே.

9. பற்றிய பாச்சி சோச்சி[5] யென்றழும் பாலி யத்தில்
உற்றசிற் றுணர்வு போத முதிர்ச்சியி லொழியு மாபோல்

1. அழுக்கு=பொறாமை. 2. குணம்=நற்குணம். 3. நந்தல்=கேடு.
4. மேல்விளைவுணர்வு=பின் வருபவை யறிதல்=தீர்க்க தெரிசனம்.
5. பால்சோறு என்பவற்றின் மருவு.

சிற்றறிவுடைய ஜீவர் சிற்சில தெளிந்த தேற்றம்
முற்றுணர் வெறிக்குங் காலை முன்னில்லா தொழியுமன்றே.

10. பேசுமித் திசையின் ஜீவர் பேதைமைப் போதப் பெற்றி
மாசுறை யாடி [1]யூடே வருபொருள் காணல் மானும் [2].
நேசமா ரருள்வந் தெய்தின் னேரினே ரையம் நீங்கி
ஆசற நம்மை நாமே அறிதல்போ லறிகுவோமே.

11. கற்றுணர் கல்வி கேள்வி கருதிய பிறவும் பாழா
உற்றிடும் பக்குவத்தில் ஒழிவிலா துறைவதோர்கில்
முற்றிய பக்தி யூக்கம் முன்சொன அன்புமாமே
மற்றவை மூன்றில் மேலா மன்னுவ தன்பே அம்ம!

12. இத்தன்மைத் தாயஅன்பிற் கிருப்பிட மாய நின்பாற்
பத்திசெய் திதகா றுன்றன் பணிவிடை பயின்றேன் மேலுன்
சித்தமெப் படியென் றோரேன் சிறியனேன் செய்யுங் குற்றம்
எத்தனை யெனினு மற்றெம் மிறைவநீ பொறுத்தல் வேண்டும்.

---

# சிவஞான போதக் கருத்து

## (2 வது சூத்திரம் 2 வது அதிகாரணம்)

(திரு. M. V. நெல்லையப்ப பிள்ளையவர்கள் B. A.)

(முன் 8-ம்சிலம்பு ௭௬௩-ம் பக்கத் தொடர்ச்சி)

65. வினையின் மற்றொருவகைப் பாகுபாடு. மேலே 61 வது பத்தியில் வினையானது அது பருமையாய் உண்டாகி நுண்மை யாயும் மிக்க நுண்மையாயும் மாறுபட்டுப் பயன்படுகிற வகை யில், வருவினை, தொகுவினை, நுகர்வினை என மூன்று வகையாகப் பாகுபாடு செய்யப்பட்டது. இனி வினையானது அது செய் யப்படுகிற இடங்களின் வகையில் உலகவினை வைதிகவினை அத் தியான்மிக வினை அதிமார்க்க வினை மாந்திரவினை என ஐந்து வகையாகப் பாகுபாடு செய்யப்படுகின்றது. வினைகளெல்லாம் ஆறு அத்துவாக்களிடமாகச் செய்யப்படுகின்றன. கலையில் ஏனைய ஐந்து அத்துவாக்களும் அடங்கும் உலக வினை நிவிர்த்தி

---

1. கண்ணாடி.　2. ஒக்கும்.

கலையினிடமாகச் செய்யப்படுவது. அது கூவல் குளம் தண்ணீர்ப் பந்தல் முதலியன அமைத்தல் ஆகும். வைதிகவினை பிரதிட்டா கலையினிடமாகச் செய்யப்படுவது. அது தேவர்களைக் குறித்து வேள்வி முதலியன செய்தல் ஆகும். அத்தியான்மிகவினை வித்தியாகலையினிடமாகச் செய்யப்படுவது. அது சிவவழிபாடு முதலியன செய்தல் ஆகும். அதிமார்க்கவினை சாந்தியா கலையினிடமாகச் செய்யப்படுவது. அது யோகஞ் செய்தல் ஆகும். மாந்திரவினை சாந்தியாதீத கலையினிடமாகச் செய்யப்படுவது. அது மந்திரம் செபித்தல் அறிவுநூல் ஓதல் முதலியன செய்தல் ஆகும். உலகவினை, வைதிக வினை இரண்டும் நிவிர்த்தி கலை பிரதிட்டாகலைகளிலடங்கிய அசுத்த மாயா புவன போகங்களைப் பயக்கும். அத்தியான்மிக வினை வித்தியா கலையில் அடங்கிய சுத்தமும் அசுத்தமுங் கலந்த மாயா புவன போகங்களைப் பயக்கும். அதிமார்க்க வினை மாந்திர வினை இரண்டும் சுத்த மாயா புவனபோகங்களைப் பயக்கும். இவ்வாறு ஐந்துவகையான வினைகளும் ஒன்றற்கொன்று எற்றமுடையதான போகத்தை (நுகர்ச்சியை) உயிருக்குப் பயந்து முடிவில் சிவபோகத்தை அடையச் செய்கின்றன. முதல்வன் மக்களுக்கு முதலாவது நிவிர்த்திகலையி லடங்கிய அசுத்த மாயா புவன போகங்களை அவர்கள் அவைகளாற் கவர்ச்சி செய்யப்பட்டுச் செய்த முயற்சியின் பயனுகக் கொடுத்து அவைகளில் அவர்களுக்கு உவர்ப்பு வந்த பொழுது பிரதிட்டாகலையிலடங்கிய அசுத்த மாயா புவன போகங்களைக் கொடுத்து அவைகளிலும் அவர்களுக்கு உவர்ப்பு வந்த பொழுது அவைகளுக்கு மேலான வித்தியாகலையிலடங்கிய சுத்தாசுத்த மாயா புவன போகங்களைக் கொடுத்து இவ்வாறே அவர்களை ஈர்த்து ஈர்த்துச் சென்று சாந்திகலை சாந்தியாதீதகலைகளி லடங்கிய சுத்த மாயா புவன போகங்களையும் நுகரும்படி செய்து முடிவில் சிவபோக மாகிய பேரின்பத்தை அடையச் செய்கின்றான். இவ்வாறு அவன் உயிர்களுக்குச் செய்கின்ற பேரருள்தான் என்னே! என்னே!!

66. முதல்வன் தனது ஆணையை உயிர்களுடைய இருவினையின்மேல் வைத்து நடத்துதலினாலேயே அவனுடைய

முழு உரிமைக்கு (பூரண சுதந்திரத்துக்கு) இழுக்கு உண்டாகாது. உலகில் அரசன் ஒருவன் பாடிகாவற்றுறையில் (Magisterial Department) ஒறுத்தற் பணியாளர்களை (Magistrates) அமைத்து அவர்கள் வழியாய் நெறியினின்று வழுவி ஒழுகுகிற தனது குடிகளை ஒறுத்தல் செய்து அவர்களை நல்வழிப்படுத்துகின்றான்; அதுபோல முதல்வன் தனது ஆணையை இருவினை மேல் வைத்து உயிர்களைக் காக்குந் தொழிலை நடத்துகின்றான். முதல்வன் உயிர்களை இருவினைப் பயனை நுகரும்படி செய்தல் எதற்காக? அவ்வுயிர்களைத் தீய நெறியினின்றும் விலக்கி நன்னெறியிற் புகச் செய்யும் பொருட்டன்றோ? அப்படிச் செய்தற்கு எந்த எந்த உயிர் எந்த எந்த வினையைச் செய்ததோ அந்த அந்த வினையின் பயனை முன்பிறழாது அந்த அந்த உயிர் நுகரும்படி செய்தலே ஏற்ற வழியாம். முதல்வன் உயிர்கள்மேல் வைத்த பேரருளினால் இவ்வாறு செய்கின்றான். ஆதலின் இவ்வாறு செய்தலினால் அவன் முழு உரிமைக்கு (பூரண சுதந்தரத்துக்கு)ச் சிறிதும் இழுக்கில்லை என அறிக.

67. இருவினைப் பயன் உயிர்களுக்கு எவ்வாறு வந்து கூடும்? உயிர்கள் தம்மை முதல்வன் அறிவித்தாலன்றித் தாமே அறியும் உரிமைஅறிவு உடையவர்களில்லை. ஆதலின் அவைகள் தாமே தாம் செய்த வினைப்பயனை அறிந்து எடுத்துக் கொள்ளமாட்டா. இருவினை உயிரில்லாப் பொருள் ஆதலின் உயிரை வந்து அடைய மாட்டாது. ஆதலின் முதல்வனே உயிர்களுக்கு அந்தந்த உயிர் செய்த வினையின் பயனை அந்த அந்த உயிரே நுகருமாறு கூட்டுவிப்பன்.

68. அத்துவித உண்மைக்கும் வினைச் சட்டத்துக்கும் உள்ள இயைபு.

முதல்வன் உயிர்கள் தனது பேரின்ப நிலையை அடைதற்கு அவைகளைப் பண்படுத்த அவைகளுடைய உயிர் வளர்ச்சி (Soul evolution) யைக் கருதி ஐந்தொழில் செய்யுங்கால் மேலே கூறியபடி உயிர்களுடன் மூவகை நிலைகளையும் உடையவனாகின்றான். முதல்வன் எல்லா உயிர்களுடைய உயிர் வளர்ச்

சியையும் தனது உள்ளக் கருத்தில் உடையவனாயிருக்கின்றான். அக்கருத்துக்கு இணக்கமாயுள்ள முறைமையே வினைச் சட்டமாகும் (Law of Karma). வினைச் சட்டமானது இயற்கையில் அமைந்துள்ள இயற்கைச் சட்டம் (Natural law). இயற்கை நிகழ்ச்சிகளிலெல்லாம் முதல்வனுடைய கருத்தை வெளிப்படுத்துகின்றன. ஆதலின் வினைச்சட்டத்தின்படி ஒழுகல் முதல்வன் உள்ளக் கருத்துக்கு இணங்க இயற்கை வழியில் ஒழுகுதலாகும். வினைச் சட்டத்தின்படி ஒழுகும் ஒழுக்கமே நல்வினையாகும். அச்சட்டத்துக்கு மாறாக ஒழுகும் ஒழுக்கம் தீவினையாகும். வினைச் சட்டமானது ஒருவன் தனது உயிர் வளர்ச்சி கருதி ஒழுகுதல் அல்லாமல் பிற உயிர்களுடைய உயிர் நலம் கருதி அவைகளுடைய உயிர் வளர்ச்சிக்கும் இணங்க ஒழுகும்படி கூறுகின்றது. ஒருவன் பிற உயிர்களுடைய உயிர் வளர்ச்சிக்கு மாறாக ஒழுகிக் கொண்டு முதல்வனுக்குச் செய்யும் சிறப்பு வழிபாடு யாதொரு பயனையும் பயவாது. ஆதலின் வினைச் சட்டமானது அத்துவிதம் என்னும் தாய் உண்மையிலிருந்து பெறப்படும் வழி உண்மைகளில் முதன்மையான உண்மை என அறிக.

69. மேலே கூறிய கருத்துக்களெல்லாம் மக்களில் ஒருவருக்கு உரித்தான தனி வினையைப் (Individual Karma) பற்றியன. மக்கள் பலர் சேர்ந்த கூட்டத்திற்கு உரித்தான கூட்ட வினையும் (Collective Karma) உள்ளது. சில மக்கள் சேர்ந்துள்ள ஒரு குடும்பத்துக்கும் பலர் சேர்ந்துள்ள ஒரு குலத்துக்கும் இன்னும் மிகப் பலர் சேர்ந்துள்ள ஒரு நாட்டுக்கும் கூட்ட வினையுண்டு. ஒரு கூட்டத்திற் சேர்ந்த மக்களில் ஒவ்வொருவரும் செய்த வினை சேர்ந்து திரண்டு அக்கூட்டத்திற்கு மொத்தமாக உரியதாகின்றது. எடுத்துக்காட்டாக இந்தியா நாடு ஆகிய நமது பெரிய நாட்டில் வாழும் மக்களில் ஒவ்வொருவரும் செய்த நல்வினை தீவினைகள் சேர்ந்து திரண்டு அந்த நாட்டினுடைய மொத்த நலந் தீங்குகளுக்குக் காரணமா யிருக்கின்றன. ஒரு நாட்டினுள்ளவர்கள் செய்த தீவினையின் பயனாக நில அதிர்ச்சி எரிமலை நீர்வெள்ளம் முதலியவற்றால் கேடுகள் உண்டாகின்

றன. தனி வினைக்குக் கூறப்பட்ட கருத்துக்களைக் கூட்ட வினைக்கும் ஏற்றபடி பொருத்தி அறிந்து கொள்க.

**70.** ஒன்றுக் கொன்று முரணுதலா யுள்ள நல்வினை தீவினை என்னும் இரு வினைகள் உலக நுகர்வு வாழ்வில் உளவாதற்குக் காரணம் ஒன்றுக் கொன்று முரணுதலாயுள்ள அருளும் ஆணவ மலமும் ஒளியும் இருளும் போல மாயா காரியங்களாகிய உடல் உட்கரணம் உலகம் நுகர் பொருள்களைச் (தனு கரண புவன போகங்களை) சேர்ந்திருத்தலேயாகும். அருளுடன் மலஞ் சேர்ந்திருத்தலினாலன்றோ உலக நுகர்வு வாழ்வில் அறிவுடன் அறியாமையும் இன்பத்துடன் துன்பமும் உண்டாகி அறிவும் இன்பமுந் தூய்மையில்லாதனவாயிருக்கின்றன. அதே காரணத்தினால் இந்த அருளால் விளங்குகிற ஒளி விளக்கமும் இருளிரவில் விளக்கொளி போல ஒரு புடை விளக்க முடையதாய் உயிர்களுக்கு மயக்கத்தைச் செய்கின்றது. ஆயினும் இருளிரவு விடியுமளவும் இந்த ஒரு புடை விளக்கமான ஒளியினாலேதான் உயிர்கள் பண்பட்டுத் திருந்தி இரவு விடிந்தபின் தோன்றுகிற நாயிற்றின் ஒளி போலப் பேரொளியாயிருக்கிற தனி அருளை அடைகிறதற்குத் தகுதி யுடையவர்களாகின்றன. இதனாலே நெறிக்கு உட்பட்ட இருவினை உலக நுகர்வு வாழ்வும் மக்களது உயிர் வளர்ச்சிக்கு எத்துணை இன்றியமையாது வேண்டப்படுவது என்பது நன்கு புலனாகும். இதனாலே தான் அன்பும் அறனுமுடைய இல்லற வாழ்வு பண்பும் பயனுமுள்ள சிறந்த வாழ்வு என்று தமிழ் மூதறிவாளர் உரைத்தனர்.

**70.** மேலே கூறியவாறு வினை இருபகுதிப் பட்டிருத்தலினாலேதான் மக்களது உலக நுகர்வு வாழ்விலுள்ளன வெல்லாம் ஒன்றுக் கொன்று முரணுதலா யுள்ளனவாய் இருபகுதிப் பட்டுள்ளன. எங்கு பார்க்கினும் தீமை கலவாத நன்மையில்லை; பொய் கலவாத மெய் இல்லை; இழவு (நட்டம்) கலவாத பேறு (இலாபம்) இல்லை; இகழ்ச்சி கலவாத புகழ்ச்சியில்லை; வெறுப்புக் கலவாத விருப்பு இல்லை; துன்பங் கலவாத இன்பமில்லை; அறியாமை கலவாத அறிவு இல்லை. உலகிலுள்

ளன வெல்லாம் நன்மைப் பகுதியும் தீமைப் பகுதியும் சேர்ந்து கலந்த முரண் இரட்டைகளாகவே (Pairs of opposites) இருக்கின்றன. இந்த முரணிரட்டைகளாலேயே உலக நுகர்வு வாழ்வு நடை பெறுகின்றது. தேவர்கள் ஒரு புறத்திலும் அசுரர்கள் மற்றொரு புறத்திலும் எதிரிடையாக நின்று பாற்கடலைக் கடைந்து அமிர்தமும் நஞ்சும் பெற்ற புராண வரலாறு இந்த உண்மையை விளக்குகின்றது. இந்த முரணிரட்டைகள் வடமொழியில் துவந்துவம் (த்வ் த்வ்) என்று கூறப்படும். இத்தகைய இருவினை உலக நுகர்வு வாழ்வில் மக்கள் செல்லும்பொழுது இரண்டு கவர் வழிகள் அவர்கள் முன்னே தோன்றுகின்றன. ஒன்று அருள் சேர்ந்த நன்னெறி; மற்றொன்று மலம் சேர்ந்த தீ நெறி. இந்த இரு நெறிகளில் மக்கள் தங்களுடைய மனதை அது சென்றவிடத்தில் செல்லவிடாது தீ நெறியை விட்டு நன்னெறியிற் செல்லும்படி செய்து பழகுதலினாலே அவர்களுக்கு வாழ்வு முற்போக்கும் (Progress in life) உயிர் வளர்ச்சியும் (Soul evolution) உண்டாகின்றன. தீ நெறியை விட்டு நன்னெறியிற் செல்லுதற்கு மக்களுடைய மனமானது மலத்தை எதிர்த்துப் போராடுதலும் அருளைத் தேர்ந்து கையாடலும் செய்தல் வேண்டும். இந்தப் போராட்டமும் (struggle) தேர்தலும் (choice) செய்துதான் மக்கள் மனம் பண்பட்டுத் தூய்மை அடைதல் வேண்டும். இவ்வாறு தூய்மை அடைந்த மனமுடைய மக்கள் தான் முரணிரட்டைகளிலிருந்து விடுதலை பெற்று வீட்டு நெறியை அடைதற்குத் தகுதி உடையவர்களாகின்றார்கள். இதனைப் பற்றி மாணிக்கவாசக சுவாமிகள் திருவாசகத்தில்

'என்புள்ளுருக்கி யிருவினையை யீடழித்துத்
துன்பங்களைந்து துவந்துவங்க டூய்மைசெய்து
முன்புள்ள வற்றை முழுதறிய வுள்புகுந்த
அன்பின் குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே'

என்று கூறியிருத்தல் காண்க. உலக நுகர்ச்சி வாழ்வில் தீமையை விட்டு நலத்தை நாடிச் செல்லுதல் மேலானதாகக் கைக்கொண்டு

நடத்தல் முறைமை என்றாலும் வீட்டு நெறி வாழ்வில் தீமையும் நன்மையும் ஒப்பக் கட்டினை (பந்தத்தை)க் கொடுக்குந் தன்மை உடையன் என்று அவ்விரண்டினையும் விடுதல் முறைமையாகின்றது. அம் முறைமை உண்மை அதிகாரத்திற் கூறப்படும்.

71. முதல்வனுடைய ஆணையாய் விளங்குகின்ற வினைச் சட்டமானது மக்களுடைய உயிர் வளர்ச்சிக்கு இன்றி அமையாது வேண்டப்படுவதாயுள்ளது. வினைச் சட்டமே மக்களைத் தீய நெறியினின்று விலக்கி நன்னெறியில் ஒழுகி உய்யும்படி செய்வது. வினைச்சட்டமே மக்களில் அவரவர்க்கு உரித்தான உரிமையை (rights) அவரவரே அடையும்படி செய்வது. வினைச் சட்டமே நடுவு நிலைமையினின்று வழுவி ஒழுகுகிற மக்களைத் துன்புறுத்தி அவர்களை மறுபடியும் நடுவு நிலைமையை உடையவர்களாகச் செய்வது. வினைச்சட்டமே மக்களை அறம், பொருள், இன்பம் என்னும் மூன்று உறுதிப் பொருள்களையும் அடையச் செய்து வீட்டு நெறியிற் கொண்டு போய் விடுவது. வினைச் சட்டமின்றி உலகில் மக்கள் சேர்ந்து வாழ்தல் முடியாது. வினைச்சட்டப்படி ஒழுகும் ஒழுக்கமே மக்களுக்கு உலக இன்பத்தைப் பயப்பது. வினைச் சட்டத்தைப் பற்றிய அறிவானது மக்களுக்கு இன்ன செய்தால் இன்ன பலன் உண்டாகும் என்னும் உண்மையை அறிவித்து அவர்களை அதனை உறுதியாய்க் கடைப்பிடித்து ஒழுகும்படி செய்து அதனால் மலத்தினின்றும் சிறிது சிறிதாய் நீங்கும்படி செய்கிறது. மக்கள் நலத்துக்காகச் செய்யப்பட்ட உலகிலுள்ள அரசியலார்களுடைய (Governments) சட்டங்களெல்லாம் வினைச் சட்டத்திற்கு ஒரு புடை ஒத்துள்ள படிச்சட்டங்களாகும் (copies). இத்தகைய வினைச் சட்டத்திற்குத் துணையாய்ப் பல பிறவிகள் வேண்டப்படுவன. ஒரு பிறவியிலுள்ள சிறிய கால எல்லையில் மக்கள் மலவலியினின்று நீங்கி உயிர் வளர்ச்சி (சீவவிகாசம்) அடைந்து முடிவில் வீட்டின்பம் அடைதல் முடியாது. ஆதலின் உயிர் வளர்ச்சி (Soul evolution)யும் அதற்கு வேண்டிய வினைச் சட்டமும் பல பிறப்புகளும் சமயத்துக்கு முதன்மையான இலக்கணமாக அமைந்துள்ளன. இந்த மூன்று உண்மைகளும் கொள்ளாத சமயங்கள் சமய இலக்கணமில்லாத சிறு நெறிகளாகும். உயிர் வளர்ச்சி வினைச் சட்டம் பல பிறப்புகள் ஆகிய உண்மைகளானவை அத்துவித உண்மையைப் போல சைவ சமயத்தினது சிறப்பைப் புலப்படுத்துகின்றன. இதனுடன் இச் சூத்திரம் இரண்டாம் அதிகரணம் முடிந்தது.

(தொடரும்.)

# பல்லாவரம், பொது நிலைக் கழகப் பெருவிழா

## முதல் நாட் சிறப்பு.

எல்லாம் வல்ல முழுமுதற் சிவபெருமான் திருவருளால் இக் கழகப் பெருவிழா 2-2-31 திங்கள் காலை 9-மணிக்குத் துவங்கப்பட்டது. கழக குரு மறைத்திரு. மறைமலையடிகள் அவர்கள் தேவார திருவாசக மாபெருந் தமிழ் மறைகள் ஓதி அம்பலவாணர் திருக்கோயில் திருக்குட முழுக்கு விழாவையும் அதனையடுத்து மணிவாசக நூல் நிலையத் திறப்பு விழாவையும் இனிதே நிகழ்த்தி யருளினர். வந்திருந்த மெய்யன்பர்களெல்லாரும் அம்பலவாணரையும் அம்மையையும், நால்வரையும் பூச்சொரிந்து இருகண்களாலும் நீளப்பருகி வழுத்தி வணங்கியும் அடிகள் மலரடிகளைத் தொழுதும் பேரின்பத்தில் தேக்கினர்.

மாலை $3\frac{1}{2}$-மணிக்குப் பொதுநிலைக் கழக இருபதாம் ஆண்டு நிறைவு விழா துவங்கப்பட்டது. விழாவுக்கு வந்த விரிவுரையாளர்களெல்லாரும் மிக்க சிறப்பாக ஊர்வலமாய் அவைக்கு வரவேற்கப்பட்டனர். அப்போது பல்லாவரம் கிராம அதிகாரி (கி. மு.) திருவாளர் தெய்வரத்தின முதலியாரவர்கள் விரிவுரையாளர்களையும் வெளியூர்களிலிருந்து அவைக்கு வந்த பெருமக்களையும் ஊரார் சார்பாக வரவேற்றுச் சிறப்புச் செய்தனர். தமிழ் வழங்கும் நாட்டின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் மெய்யன்பர்கள் மிகுதியாக வந்திருந்தார்கள். தேவார திருவாசகங்கள் இன்னிசைக் கருவிகளுடன் ஓதப்பட்டன. அன்பர்கள் மகிழ்ச்சியினிடையே ஆசிரியர் மறைமலையடிகள் அவைத்தலைமை பூண்டு மேற்கொண்டருளினர். அப்போது திருவாவடுதுறைத் திருமடத்தலைவர் அவர்கள் அடிகட்கு அனுப்பிய சிறப்புக்களான பொற் பட்டாடைகளும் பொற் சரிகை பின்னிய பொற் போர்வையும் அவிநாசியில் எழுந்தருளியிருக்கும் மறைத்திரு. கருணாலய அடிகள் சிறப்பித்துக் கொடுக்க அடிகள் அவற்றைத் தாங்கியருளினர். திருவாவடுதுறை திருமடத் தலைவர் அவர்களின் திருவுள்ள உயர்வு அடிகளாலும் அவையோராலும் பெரிதும் பாராட்டப்பட்டது.

பின், சென்னைப் பச்சையப்பன் கல்லூரித் தமிழாசிரியர் திருவாளர் மணி. திருநாவுக்கரசு முதலியார் அவர்கள் பொதுநிலைக் கழக அமைப்பும் நோக்கமும்பற்றி மிக விளக்கமாக விரித்துரைத்தனர். வரவேற்புத் தாள்கள் வழங்கிப் படிக்கப்பட்டன. திருவாளர் இளவழகனர் விரிவுரையாளர்க்கு வரவேற்பும், பொருளுதவி செய்தார்க்கு நன்றியுங் கூறினர். அதன்பின் மறைமலை யடிகள் ‘அம்பலவாணர் திருக்கூத்தின் உண்மையும் ஞான யோகமும்’ என்னும் அரிய பொருள் பற்றித் தமது இனிய குரல் கொண்டு முன்னுரை கூறி யருளினர்கள். அதனை முன் 33-ம் பக்கத்திற் காண்க.



திருவருட்பா ஸ்ரீஇராமலிங்க சுவாமிகள் மாணுக்கரும்
இராசதானிக் கலாசாலையில் தமிழாசிரியராயிருந்தவரும்,
'வேளாண்மரபியல்' 'திருவெண்காட்டடிகள் சரித்திரம்'
'பெரியபுராணவசனம்' முதலிய நூல்களை இயற்றியவருமான
தொழுவூர்—வேலாயுத முதலியார்.